Regd. No. M. 4302



அழுக்குப்படிந்த கயிறு கெடுதல்
யாதும் செய்யாததுபோல் இருக்கிறது.
ஆனால் உண்மையில்

# இந்த கைகள்
## மறைந்திருக்கும் அபாயத்தை
# வகிக்கின்றன

அழுக்கிலிருக்கும் கண்ணுக்குப்புலப்படாத கிருமிகளில்
அபாயமிருக்கிறது.

## லைப்பாயினால் அடிக்கடி கழுவுங்கள்

# லைப்பாய் சோப்

அழுக்கிலிருக்கும்
கிருமிகளிலிருந்து
உங்களைக்காப்பாற்றுகிறது!



L. 136-50 TM

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamalle High Road, Kilpauk, Madras

# "க்ருஷன்" எனது கீல் வாதத்தைச் சீக்கிரம் நிறுத்தியது






கீல் வாதத்தின் கொடிய வலியினால் தாக்கப்படும்வரை சர்மா மிகுந்த சுறுசுறுப்பாகவே தன் வேலைகளை நன்கு செய்து வந்தான்.

"என்னால் வேலையே செய்ய முடியாதபடி அவ்வளவு மோசமானதாக இருந்தது. வேலைக்கே போக முடியாமலிருந்தது; வேலையை இழந்து விடுவேனோ என்றும் பயந்தேன். ஒரு சிநேகிதர் "க்ருஷன்" ஸால்ட்டைச் சாப்பிட்டுப் பார்க்கும்படி சொன்னார். ஒரு பாட்டில் வாங்கி உபயோகித்து உடனே குணம் தெரிந்தது. நான் இப்போது கீல்வாதத்தினால் சிரமப்படாமலிருப்பதுமன்றி எனது வேலைகளை முன்னைவிட நன்கு செவ்வனே செய்ய முடிகிறது. இவ்வுணர்ச்சியை நிரந்தரமாகச் செய்யத் தினந்தோறும் தவறாமல் ஒரு சிறு அளவு க்ருஷன் சாப்பிடுகிறேன்."

கீல் வாதத்தின் சித்திரவதையிலிருந்து சீக்கிரமே குணமடைய விரும்பினால் இப்பொழுதே க்ருஷன் சாப்பிட ஆரம்பியுங்கள். க்ருஷனில் உள்ள முக்கியமான ஆறு உப்புக்கள் உங்கள் ரத்தத்தைச் சுத்தம் செய்து, மூத்திரக் காய்களை இயற்கைப் பிரகாரமே வேலை செய்யத் தூண்டுகின்றன. ரத்தத்தில் சேர்ந்துள்ள விஷப் பொருள்களை வெளியேற்றவும் இவை ஏதுவாகின்றன. அதனால் உங்களது வலிகள், பிடிப்புகள், அகலுவதோடுகூடத் தவறாமல் தினந்தோறும் ஒரு சிறு அளவு "க்ருஷனை"த் தொடர்ந்து சாப்பிட்டுவரின் அவ்வலிகள் அநேகமாய் உங்களை மறுபடியும் பாதிக்காது.

இன்றே "க்ருஷன்" வாங்குங்கள். மஞ்சள் பெட்டியில் ரூ. 1-8-0க்கு எல்லாக் கெமிஸ்டுகளிடமும் மற்றுமுள்ள எல்லாக் கடைகளிலும் விற்பனையாகின்றன.

## நீங்களும் அந்த "க்ருஷன்" உணர்ச்சியைப் பெறலாம்

# ஹமாம் — ஒவ்வொருவருடைய மனதிற்கு மிசைந்த ஸோப்பு!★










★ மற்றெந்த ஸோப்பையும்விட ஹமாமுக்கே அதிக கிராக்கி என்பதற்கு அசல் விற்பனை புள்ளி விவரங்களே சான்று.

இ டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி லிமிடெட்



சபாகாரியதரிசி:—ஸார்! உங்கள் பெண் பேபி வனகுமாரி நேற்று துங்கபுரி சபாவிலே பிரமாதமாக ஆடினாளாமே! பத்திரிகைகளில் எல்லாம் அவள் பெயர் அடிபடுகிறதே. எங்கள் சபாவிலே கூட ஏற்பாடு பண்ணலாம் என்று வந்திருக்கிறேன், அவளைப் பார்க்கலாமா?

வீட்டுக்காரர்:—இப்பொழுதுதான் தூளியிலே போட்டு என் மனைவி தூங்கப் பண்ணியிருக்கிறாள். இன்னொரு சமயம் வாருங்களேன்!

கொள்ளாமல்தான் இருக்கின்றன. தாங்கள் நிர்மாணப்படுத்தும் ராக லக்ஷணப்படி தங்கள் சபையில் ஏற்படுத்தியிருக்கும் பெரிய வித்வான்களைக் கூடப் பாடும்படி சொல்ல முடிவதில்லை. எல்லா ராகங்களும் அவர்கள் இஷ்டத்துக்கு மாறி வராமல் தங்கள் போக்குப்படியே இருக்கின்றன. ஆகையால் இந்த வருஷம் ஒரு மாறுதல் செய்ய வேண்டுமென்று நிர்மாணித்தார்கள். பலர் அறிய முடியாத நுட்பமான, கடினமான விஷயங்களை, அந்த விஷயத்தில் பண்டிதர்களாக இருக்கும் நிபுணர்கள் கையாண்டு நிதர்சனப் படுத்த வேண்டிய நிருத்யநாடகக் கச்சேரிகளுக்கு இளம் வித்வான்களை எற்றவர்களாக மாற்றிக் கொண்டார்கள்! இவ்வாறு செய்ததில் என்ன தவறு?

காருகுர்ச்சி
23—1—50

ஆர். அய்யாவய்யர்

○●○

## பாதுகாப்பு வேண்டும்

மத்ய சர்க்காரின் பாதுகாப்பு இலாக்காவின் ஒரு முக்கியமான அங்கம், ஆவடி தனத்தில் இருப்பது யாவரும் அறிந்ததுதான். இந்தத் தனம் ரயில், கடல் முதலான போக்குவரத்துச் சாதனங்களைப் பெற்று 27 சதுர மைல் விஸ்தீரணத்தில் 26 கோடி ரூபாய் செலவில் கட்டப்பட்டது. உலகத்திலேயே இரண்டாவதும், தென் கிழக்கு ஆசியா பிரதேசத்தில் முதன்மை ஸ்தானமும் பெற்றது. இதைச் சர்க்கார் மூடிவிடத் திட்டமிட்டுள்ளனர்.

நாட்டின் பொருளாதார நிலைமையை உத்தேசித்தாவது மூடிவிடுதல் நியாயமா? இங்குள்ள, ஆர்ட்னன்ஸ் டிப்போவின் சாமான்களை வட இந்தியாவில் வேறு இடத்தில் ஓர் டிப்போவை நிர்மாணிக்க அனுப்புவது நியாயந்தானா? முன்பு 15,000 பேர் வேலை செய்துவந்த இந்தத் தனத்தில், இப்போது கேவலம் 1,500 பேர்கள்தான் இருக்கின்றனர். இவர்களையும் வேலையில்லாமல் செய்வது தருமமா?

காஷ்மீர் யுத்தத்திலும் ஹைதராபாத் கலவரத்திலும் நடந்த சண்டைகளுக்கு நம் ராணுவத்தினருக்கும் போலீசுக்கும் தகுந்த சமயத்தில் சாமான்களை அனுப்பி, வெற்றிக்குக் காரணமாயிருந்தது, இந்த 'ஆர்ட்னன்ஸ்' டிப்போ என்பதை யாரும் மறக்கவோ, மறுக்கவோ முடியாது.

தென்னிந்தியாவிலேயே இது ஒரு டிப்போதான் உள்ளது. இதவும் மூடப்படுமானால், இங்கு பாதுகாப்புக்காகவும், அமைதியை நிலைவும், அந்நியர் ஆக்கிரமிப்பைத் தடுக்கவும் இப்பாகங்களில் உள்ள அநேக ராணுவ முகாம்களுக்கு வேண்டிய சாமான்களை அனுப்பி உதவவும் இது இங்கு இருக்க வேண்டாமா?

இப்போது பாதுகாப்பு இலாக்கா, நமது ஜனாதிபதியின் நேர் பார்வையில் இருப்பதால், இதை நிரந்தரமான சென்ட்ரல் டிப்போவாக மாற்றி, 1,500 பேர்களின் குடும்பங்களைக் காப்பாற்றவும் மாகாணத்தின் பாதுகாப்பிற்காகவும், மத்ய சர்க்காரும், மாகாண சர்க்காரும் நடவடிக்கை எடுத்துக் கொள்வார்களா?

பார்லிமெண்டில் உள்ள தென்னிந்தியப் பிரதிநிதிகளும் ஒரு முகமாக நின்று இக்காரியத்தைச் செய்து முடிப்பார்களென்று எதிர்பார்க்கிறேன்.

ஆவடி
30—1—50

வா. சீனிவாச ராவ்

★ வட்டமேஜைப் பரிசுத் தொகை ரூ. 25-ஐ "சங்கீதம் எப்படி வரும்?" என்ற கடிதம் எழுதிய திருச்சிராப்பள்ளி ஸ்ரீமதி எஸ். இந்திராவுக்கும், "இதில் என்ன தவறு?" என்ற கடிதம் எழுதிய காருகுர்ச்சி ஸ்ரீ ஆர். அய்யாவய்யருக்கும் ரூ. 12—8—0 வீதம் பிரித்து வழங்கப்பட்டது.

சிறு மனோபாவத்துடன் ஆவர்த்தம் வாசிக்க ஆரம்பித்தார்களேயானால் அங்கும் "இடப் பிரச்னைதான்" ஏற்படும். ஒரு கஞ்சிரா வித்வான், தான் எந்த மிருதங்கத்துடன் கஞ்சிரா வாசிப்பதாகவிருந்தாலும் முன்னால்தான் உட்கார்ந்து வாசிப்பது வழக்கம் என்றும், கஞ்சிராவுக்குப் பொருத்தமான இடம் முன்பக்கம்தான் என்றும் சொன்னார். ஒரு சமயம் அதே பேர்வழி மிருதங்கமும் வேறொருவர் கஞ்சிரா வாசிக்கவும் நேர்ந்தபொழுது அந்தக் கஞ்சிராக் காரரைப் பின்னால் உட்காரவைத்துத் தான் முன்னால் மிருதங்கத்துடன் உட்கார்ந்து கொண்டார்.

ஆகவே அவர்களுடைய காரியம் ஒரு சட்டத்திற்கும் உட்பட்டதாக இல்லை. ஸீனியர், ஜூனியர் முறை ஒட்டி இருப்பதாகவும் தெரியவில்லை. ஸீனியர், ஜூனியர் என்பதற்காக இடத்தை மாற்றிக் கொள்வதும் சரியல்ல. ஒரு ஸீனியரான, பிரபல பாடகர் கச்சேரிக்கு ஒரு சிறு பையன் பிடிலோ, மிருதங்கமோ வாசிக்கும்படி நேரும்பொழுது இடத்தையா மாற்றுகிறோம்? அல்லது ஒரு சிறு பையன் கச்சேரிக்குப் பெரிய பக்க வாத்தியக் காரர்கள் வாசிக்க நேர்ந்தால் அந்தப் பையனுக்குப் பாட்டு ஸ்தானம் கொடுக்காமல் இருக்க முடியுமா? ஆகையால் இந்தக் கஞ்சிரா இடப் பிரச்னை தீருவதற்கு ஏதாவது வழி பிறந்தால் நல்லது.

தஞ்சாவூர்
25—1—50 மைலாட்டூர் ராமச்சந்திரன்

○●○

## கன்னியாகுமரிக்கு ரயில்

திருச்செந்தூரிலிருந்து கன்னியாகுமரிக்கு ரெயில் விடத் தண்டவாளம் போட வேண்டுமென்கின்ற உத்தேசம் ரயில்வே போர்டில் இருந்து வருகிறதாகக் கேள்விப்படுகிறோம். ஏற்கெனவே திருச்செந்தூரிலிருந்து திசையன்விளைக்கு கே. எல். ஆர். ரயில்வே போனவழியாகப் பாதை போட்டுத் திசையன்விளையிலிருந்து கன்னியாகுமரிக்குப் பாதை போட்டால் தூரம் குறையும். மேலும் இந்தப் பாதையின் அருகாமையில் உள்ள கிராமங்களில் உற்பத்தியாகும் பனை வெல்லம், நார், பாய், உப்பு போன்ற ஏராளமான பொருள்கள் ஏற்றுமதியாகும். அதனால் நல்ல வருமானமும் ஏற்படும். ஆகையால் ரெயில்வே போர்டார் கவனித்து இந்த வழியாக ரெயில் தண்டவாளம் போடும்படி கேட்டுக் கொள்கிறேன்.

கிறிஸ்தியா நகரம்
20—1—50 வ. மந்திரம்



"இது புது மாடல் கார், ஸார்! இப்போது 'ஸ்டார்ட்' பண்ணினால் ஒரு மணி நேரத்தில் செங்கல்பட்டுக்குப் போய் விடலாம்."

"அப்படியானால் அது எனக்குப் பிரயோசனமில்லை!"

"ஏன் ஸார்?"

"செங்கல்பட்டில் எனக்கு வேலை ஒன்றும் கிடையாது."



○●○

## ★ இதில் என்ன தவறு?

தங்கள் 'கல்கி' 22—1—50 இதழில் 'சங்கீத சர்ச்சைகள்' என்ற மகுடத்தின் கீழ் 'இசை ரசிகன்' எழுதியிருக்கும் சர்ச்சையைப் படித்ததில், வித்வத் சபையில் "திருஷ்டாந்தக் கச்சேரிகள்" என்ற புதுப் பெயருடன் ஏற்பாடு செய்த இளம் வித்வான்களுடைய கச்சேரிகளைப் பற்றிய நோக்கம் விளக்கவில்லை என்று எழுதியிருக்கிறது. வித்வத் சபையார் வருஷா வருஷம் சங்கீத விழா நடத்துவதற்கு ஏதாவது ஒரு மாறுதல் வேண்டும். சென்ற ஆண்டு வரை தாங்கள் நடத்தும் மகாநாட்டில் தாங்கள் செய்யும் காரியங்கள் எல்லாமே சாஸ்வதமாக ஒரே மாதிரியாகச் சிரஞ்சீவிப் பட்டம் பெற்று விடுவதைப் பார்த்தார்கள். தாங்களாக ஏதாவது மாறுதல் செய்யப் போனால், அதை மாறுதல் அடையாமல் பழைய மாதிரியிலேயே இருந்து விடுகின்றன. மகாநாட்டில் நடத்தும் பெரிய கச்சேரிகளோ, வித்வான்களோ, வித்வான்கள் பாடும் பாட்டுக்களோ, ராகங்களோ, ராகம் பாடும் முறைகளோ, அவர்கள் பாடும்போது சுருதியோ ஒன்றும் மாறுவதில்லை.

ராக லக்ஷணங்களைப் பற்றியும், சங்கீத லக்ஷியத்தைப் பற்றியும் வீண் சர்ச்சைகள் நடத்தி வருஷா வருஷம் அலசி அலசித் தீர்மானம் செய்யும் ராகங்களும் கிருதிகளாக அவர்கள் தீர்மானித்தபடி மாறிக்

காப்பி, வெற்றிலை, பாக்கு, புகையிலை, முதலியவற்றைத் தட்டில் எடுத்து வைக்க வேண்டும். பிறகுதான் பாயை விரித்து வீணையை எடுத்து வைக்க வேண்டும். ஒரு நாள் உற்சாகத்தில், "நீ வீணைக்காகவே பிறந்தவள்" என்று வாத்தியார் கொண்டாடுகிறார். மறுநாளோ நரசிம்மாவதாரம் கொண்டு, "மூதேவி! உனக்குப் பாட்டு ஒரு நாளும் வராது. உனக்குச் சொல்லிக் கொடுப்பதும் தண்டம்" என்று எரிந்து விழுகிறார். இதில் நான் எதை நம்புவது? சங்கீதக் கலையின்மேல் உள்ள ஆசையால் தன் சக்திக்கும் மீறித் தங்கள் குழந்தைகளுக்குப் பாட்டு சொல்லிக் கொடுக்க முன் வருகிறார்கள் பெற்றோர்கள். பாட்டு வாத்தியார்கள் இவ்வாறு பாட்டு கற்றுக் கொள்ளும் சிறுமிகளிடம் உற்சாகம் குன்றும்படி பேசினால் அவர்களுக்கு அந்தக் கலையின் மீது ஆசை எவ்வாறு உண்டாகும்? பாட்டு எப்படி நன்றாக வரும்?

திருச்சிராப்பள்ளி
30-1-50 — எஸ். இந்திரா

○●○

## சங்கீத மேடையில் இடப் பிரச்னை

ஒரு சங்கீதக் கச்சேரி என்றால் பாட்டு, பிடில், மிருதங்கம் இம்மூன்றும் சேர்ந்தது என்பது யாவரும் அறிந்த விஷயமே. கச்சேரியில் நடுவில் தலைமைஸ்தானம் வகிக்கும் பாடகரும், ஒரு பக்கம் பிடில்காரரும், இன்னொரு பக்கம் மிருதங்கக்காரரும் உட்காருவது சம்பிரதாயம். சுருதியுடன் நாதமயமாகச் சேரக் கூடியது, மிருதங்கத்தின் வலப்பாகம் சபையோர் பக்கமாக இருக்கவேண்டும் என்பதற்காகவே பாடகரின் வலப்புறத்தில் மிருதங்கக்காரரை அமர்த்துவது வழக்கம். அதாவது மிருதங்கத்தின் தொப்பி சப்தம் அதிகமாகக் கேட்கக்கூடாது என்பதே அதன் முக்கிய நோக்கம். பிடிலுக்கு மேற்படி அசௌகரியம் கிடையாது. அதனாலேயே இடது கை அப்பியாசிகளான மிருதங்க வித்வான்கள் கச்சேரியில் வாசிக்க வரும்பொழுது இடம் மாறி உட்கார வேண்டிய அவசியமும் ஏற்படுகிறது. பாட்டோ, பிடிலோ மிருதங்கமோ இவைகளைத் தவிர, ஒரு கச்சேரிக்கு உப பக்க வாத்தியங்களாகச் சேர்த்துக் கொள்ளக்கூடிய கஞ்சிரா, கடம், டோலக், முகர்சிங்கு, கொன்னக்கோல் இவற்றுக்கெல்லாம் நிர்ணயமான ஒரு இடம் இருக்க வேண்டியது அவசியமல்லவா? கடம், டோலக், முகர்சிங்கு இவைகளைப் பற்றி இடப் பிரச்னை கிடையாது. பாட்டு, பிடில், மிருதங்க செட்டுக்குப் பின்புறமாக உட்கார்ந்துகொண்டு அவர்கள் வாசிக்கிறார்கள். ஆனால் கஞ்சிராவுக்கு மட்டும் உட்காருமிடம் நிர்ணயமில்லாமல் அந்த வாத்தியக்காரர் மாறி மாறி உட்காருவது நன்றாக இல்லை.

மேலும் கஞ்சிரா வித்வான்கள் எந்த அபிப்பிராயத்துடன் ஒரு மிருதங்கக்காரருக்கு முன்புறமும், இன்னொரு மிருதங்கக்காரருக்குப் பின்புறமும் உட்கார்ந்து வாசிக்கிறார்கள் என்பது விளங்கவில்லை. மிருதங்கத்தின் தொப்பி பாகம் சபையோர் பக்கம் கேட்காமல், நாதபாகம் நன்றாகக் கேட்க வேண்டுமென்று ஏற்படுத்தப் பட்டிருப்பதை, முன் பக்கம். உட்கார்ந்து கஞ்சிரா வாசிக்கும் சப்தமானது எவ்வளவு தூரம் கெடுத்து விடுகிறது? இந்த இடப் பிரச்னையினால் எவ்வளவோ தகராறுகள் ஏற்படுகின்றன.

ஒரு சபையில் ஒரு வித்வானுடைய கச்சேரிக்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். அவருக்குக் கஞ்சிரா பக்கவாத்தியமும் சேர்க்கப்பட்டிருந்தது. கச்சேரி செய்யப் புறப்படும்பொழுது மிருதங்க வித்வானுக்கும் கஞ்சிரா வித்வானுக்கும் இடப் பிரச்னையினால் பெரிய தகராறு வந்து விட்டது. கஞ்சிரா வித்வான் "தான் .....இன்னாரின் சிஷ்யன், ஆகையால் நான்தான் முன்னால் உட்காருவேன்" என்கிறார். மிருதங்க வித்வானோ "நானும்... இன்னாரின் சிஷ்யன்; என் குரு உங்கள் குருவுடன் வாசித்த போது உங்கள் குரு பின்னால் உட்கார்ந்து தான் வாசித்திருக்கிறார். ஆகவே நான் தான் முன்னால் உட்காருவேன்" என்கிறார். கச்சேரி ஆரம்பிக்க வேண்டிய நேரம் கழிந்து வெகு நேரம் ஆகியும் தகராறு தீர்ந்தபாடில்லை. கடைசியாகப் பிடில்காரரைத் தாஜா செய்து பிடிலுக்கு முன்பாகக் கஞ்சிராக்காரர் உட்காரும்படி ஏற்பாடு செய்தார்கள். கச்சேரி தொடங்கிற்று. பிடில்காரரும் தகராறு செய்யக்கூடியவராக இருந்திருப்பாரானால் கச்சேரியையே நிறுத்தி விட நேர்ந்திருக்கும்.

சபையில் இடப் பிரச்னை, ஹோட்டலில் இடப் பிரச்னை இவையெல்லாம் போதாதென்று கச்சேரி மேடையிலும் இடப் பிரச்னையா? கஞ்சிரா வித்வான் இடத் தகராறினால் மிருதங்கக்காரரை "ஒரு கை" பார்த்து விடுவது என்று கருவிக் கொண்டும், மிருதங்கக்காரர் "இரண்டு கை" யாவது பார்த்து விடுவது என்




## கல்வி மிகக் கற்றவரே!

மேல் நாடுகளில் எழுத்தறிவு அதிகமிருந்தும் அதைப் பெருக்க அரசாங்கமும் பொது மக்களும் செய்யும் வேலை மகத்தானதாக இருக்கின்றது. ஆங்கில நாட்டில் ஆங்காங்கு 'கல்விக் கமிட்டிகள்' ஏற்படுத்தி, மாலைப் பள்ளிகள் நிறுவி, நாட்டின் ஒவ்வொரு முதியவனும் கல்வி கற்க வசதி செய்யப்படுகின்றது. அரசாங்கமும் பெரும்பாலும் பொது மக்களுமே இதை நடத்துகின்றனர்.

அமெரிக்காவில் படிக்கத் தெரியாதவர்கள் 100-க்கு 3 பேரே. மக்கள் அத்தனைபேர் படித்திருந்தும் படிக்காத மக்களுக்கு எழுத்தறிவிக்க அவர்கள் மும்முரமாக வேலை செய்கின்றனர்!

ஆஸ்திரேலியாவில் பெண்கள் இத்துறையில் புரியும் சேவை உலகுக்கு ஓர் எடுத்துக்காட்டு! செஞ்சிலுவைச் சங்கங்களும், வைத்திய சேவைக் குழுவினரும், கலை வளர்க்கும் ஸ்தாபனங்களும், திரவிய சேமிப்பு ஸ்தாபனங்களும், பதிப்பகங்களும், திரை மண்டபங்களும் இவ்வியக்கத்திற்குச் செய்து வரும் தொண்டு குறிப்பிடத் தக்கது.

சோவியத் நாட்டில் ஒவ்வொரு கிராமத்திலும் 'அறியாமை ஒழிக்கும் சங்கம்' (DoWn—with — Illiternacy Society) என்று ஒரு சங்கம் உண்டு. மாலையில் குறித்த நேரத்தில் அக்கிராமத்திலுள்ள எழுதப் படிக்கத் தெரியாதவருள் பெரும்பாலோர் அவ்விடத்திற்கு வந்து சேருவார்கள். 'ஒவ்வொருவரும் ஒருவருக்குக் கற்பிக்கவேண்டும்' (Ench one—Teach one) என்ற முறைப்படி கற்றோர் அங்கு வந்து ஒவ்வொருவரும் எவரேனும் ஒருவரையடைந்து அவருக்கு அதன் முந்தின நாள் எங்கு பாடம் நிறுத்தப்பட்டதோ அங்கிருந்து தொடர்ந்து நடத்துவார்கள்.

எழுத்தறிவிப்பதில் உலகம் இவ்வாறு முன்னேறும்போது நம் நாடு இத்துறையில் வேகங் கொள்ளாதது வியப்பாக இருக்கிறது; அதோடு வருத்தத்தையும் கொடுக்கிறது. ஆசிய நாடுகளுக்கே தலைமை தாங்கும் இந்தியாவில்—இருபத்தொரு ஆண்டுகளுக்கு மேற்பட்ட முதியவர்களே இனி வோட்டுக் கொடுக்கப்போகும் நம் தாய் நாட்டில் மக்கள் எழுத்தறிவின்றி இருப்பது பேதமை. நாட்டைக் குலைக்கும் இப்பழியை இப்போதே நீக்காவிடில் இன்று கற்றவராக இருந்தவரும் நம்மை, நாளை நாடும் உலகமும் 'சயகலைப் பிரியர்கள்' எனத் தூற்றும். பாரதநாட்டுப் பண்புக்கேற்ற புகழுடன் நாம் வாழ விரும்புவோமானால் இனி எழுத்தறிவு இயக்கம் முழுதும் மக்கள் இயக்கமாகவே விளங்கவேண்டும்.

சென்னை
29—1—50 அ. வி. இந்திரன்

○●○

## ★ சங்கீதம் எப்படி வரும்?

சில நாட்கள் முன்பு இளம் பாடகர்களில் ஒருவர் பாட்டு சொல்லிக் கொடுக்கும் வீடுகளில் தங்களுக்கு உண்டாகும் கஷ்டங்களை விளக்கி 'வட்டமேஜை'யில் எழுதியிருந்தார். பெற்றோர்கள் அக்குறைகளையெல்லாம் நீக்க முன்வர வேண்டும். ஆனால் சில பாட்டு வாத்தியார்களால் என்னைப் போன்ற சிறுமிகளுக்கு ஏற்படும் கஷ்டங்களை யாரிடம் சொல்லிக் கொள்வது?

நான் எழாவது வகுப்பில் படித்துக் கொண்டிருக்கிறேன். எனக்கு வீட்டில் வீணை சொல்லித்தர ஒரு வாத்தியாரை மாதம் ரூபாய் முப்பது சம்பளம் கொடுத்து அமர்த்தியிருக்கிறார்கள். மாதம் பன்னிரண்டு நாள் வரவேண்டும் என்பது பேச்சு. ஆனால் என் பாட்டு வாத்தியார் மாதம் எட்டு நாட்களுக்குமேல் வந்ததே கிடையாது. அந்த எட்டு நாட்களும் தொடர்ச்சியாக வருவதில்லை. வெளியூர்களில்கூட டியூஷன் வைத்துக் கொண்டிருக்கிறார். மாறி மாறி இங்கும் அங்கும் செல்வதால் பாட்டுத் தடைப்பட்டுப் போகிறது.

பாட்டு சரியாகப் பாட வருகிறதோ இல்லையோ அதைப்பற்றிக் கேள்வி இல்லை. வாத்தியார் தெருக்கோடியில் வந்து கொண்டிருப்பதைப் பார்த்ததும் உடனே ஓடி வந்து,

கொடுக்க அந்தப் பெண்ணேடு அப்பனுக்கு மனசு வந்ததோ?" என்றான் தணிகாசலம்.

"அதுக்கென்னப்பா பண்ணுறது? பணமில்லாத கொடுமைதான்."

"அந்தக் கிழவனுக்குத்தான் ஏன் இப்படி புத்தி போகுது?"

"அந்தப் பெண்ணுடைய நன்மையை அவர் ஏன் கவனிக்கப் போகிறார்? அவர் சௌகரியத்துக்கு அவர் கலியாணம் பண்ணிக்கிட்டாரு. இந்த உலகத்திலே நியாயம் தெரிஞ்சு நடக்கிறவங்க ரொம்ப அபூர்வம். என் நம்ம ஊரையே எடுத்துக் கிடேன். இந்த ஊரிலே பெரிய மனிசனுக்குள்ளே வயசானத்துக்கப்புறம் முதல் சம்சாரம் தவறிப்போய் இரண்டாம் தாரம் எடுத்துக்காம இருக்கிறவங்க, எனக்குத் தெரிஞ்சு, உங்க எசமான் ராஜரத்ன முதலியாரு ஒருவர்தான்" என்றான் மருதமுத்து.

"ஆமாம்; அவர் இந்தமாதிரி காரியத்தைக் கனவிலேகூட நினைக்கமாட்டார்" என்றான் தணிகாசலம் பெருமை கலந்த குரலில்.

பிறகு தீப்பெட்டியை வாங்கி வண்டியிலுள்ள விளக்கை ஏற்றிக்கொண்டு அங்கிருந்து கிளம்பினான் மருதமுத்து.

*

சம்பாஷணையின் முடிவில் கேட்ட வார்த்தைகள் ராஜரத்னத்தை மயிர்கூச்செறியும்படி செய்தன. அவருடைய அறிவை மறைத்துக் கொண்டிருந்த சபலத் திரை உடனே அகன்றது. கொஞ்ச காலமாகப் பேதலித்திருந்த அவர் மனம் அதே சமயத்தில் தெளிவடைந்தது. மெதுவாக எழுந்திருந்தார். மேஜையின் அறைக்குள் சென்று 'டிராய'ருக்குள் மகனுக்கும் மகளுக்கும் எழுதிவைத்திருந்த கடிதங்களை எடுத்துக் கிழித்து எறிந்தார். நிம்மதியடைந்த மனது கொஞ்ச நேரத்திற்கெல்லாம் அவருக்கு ஆழ்ந்த நித்திரையைக் கொடுத்தது.

பொழுது விடிந்ததும் முதல் காரியமாகக் கோவிந்தபுரம் மாணிக்க முதலியாருக்கு அவருடைய மூத்த பெண்ணைத் தகுந்தவனுக்கு கொடுக்கும்படி கடிதம் எழுதினார். அதற்கு உதவியாயிருக்கும் பொருட்டு ஐந்நூறு ரூபாய்க்கு ஒரு 'செக்'கும் வைத்து இரண்டையும் உறையிலிட்டுத் தம் கையாலேயே தெருக் கோடியிலுள்ள தபால் பெட்டியில் போட்டுவிட்டு வீட்டுக்குத் திரும்பி வந்து ஒரு சாய்மான நாற்காலியில் சாய்ந்தார். அவர் அமர்ந்த அடுத்த நிமிஷம், "அப்பா" என்று கூவிக் கொண்டே அவருடைய பெண் பெரிய நாயகி வண்டியிலிருந்து கீழே இறங்கிக் கொண்டிருந்தாள். வீட்டுக்குள் வந்ததும் ராஜரத்ன முதலியாரின் மெலிந்திருந்த உடம்பைக் கண்டதும், "அப்பா, அடையாளமே தெரியாமல் இப்படி இளைத்துப் போய் விட்டீர்களே! காய்ச்சலில் ரொம்பவும் சிரமப்பட்டிருப்பீர்களே!" என்று உணர்ச்சி பெருக, கண்ணில் நீர் மல்கக் கூறித் தகப்பனாரை வணங்கினாள். ராஜரத்ன முதலியாரும் உணர்ச்சி மிகுதியால் கண் கலங்கி விட்டார். ஆனாலும் சமாளித்துக் கொண்டு பெண்ணைத் தேற்றினார்.

பெரியநாயகி "அப்பா, உங்களுக்கு உடம்பு சரியில்லை என்று நீங்கள் மாப்பிள்ளைக்கு எழுதியிருந்த கடிதம் 'காம்ப்' விலாசத்திற்கு ஆபீஸ் தபால்களுடன் போய் விட்டது. போனவாரம்தான் என் கைக்கு வந்தது. அவர் 'காம்பி'லிருந்து திரும்பி வந்ததும் என்னை உடனே போய் உங்களைக் கையோடு கூட்டிக்கொண்டு வரும்படி சொல்லிவிட்டார். நீங்கள் அங்கே வந்து இரண்டு மாசமாவது தங்கி உடம்பைத் தேற்றிக் கொண்டால்தான் எனக்கும் உங்கள் மாப்பிள்ளைக்கும் மனதுக்கு நிம்மதியிருக்கும். நீங்கள் பாஸ்கரனுக்கு எழுதிய கடிதங்கள் ஒன்றுகூட அவனுக்கு, ஒரு மாதமாகப் போயிருக்க முடியாது என்று நினைக்கிறேன். அவனுக்கு வயிற்றுவலி, சிகிச்சைக்காக ஒரு மாசமாக ஆஸ்பத்திரியிலிருக்கும் தகவலைப் போன வாரம்தான் எனக்குத் தெரிவித்திருந்தான்" என்று சொல்லி முடித்தாள்.

கடமையை உணர்ந்த பெண்ணைப் பெற்ற காரணத்தால் ஏற்பட்ட பெருமிதம் இவ்வளவு அவ்வளவு அல்ல ராஜரத்ன முதலியாருக்கு. ஒரு புறம் பெருமிதம் ஏற்பட்ட போதிலும், தம் மகனுடைய நினைவு வந்ததும் கவலைக்குறி முகத்தில் படர்ந்தது. நோய் வாய்ப்பட்டு ஆஸ்பத்திரியிலிருக்கும் மகன் எப்படியிருக்கிறானோ என்ற எண்ணம் தான் அதற்குக் காரணம். அவனைப் பற்றித் தவறாகத் தாம் நினைத்து விட்டதற்காக உள்ளத்தில் மிகவும் வெட்கப் பட்டார். அதற்குப் பரிகாரமாக முதலில் மகனைப் பார்க்கத் தீர்மானித்தார்.

அடுத்த நாளே கிராமத்திலுள்ள வீட்டைப் பார்த்துக் கொள்ளும்படி சமையற்காரன் தணிகாசலத்தினிடம் ஒப்படைத்து விட்டுத் தம் பெண் பெரிய நாயகி சகிதம் சென்னையை நோக்கிப் பிரயாணமானார்.

இந்தமாதிரி உன் உடம்பு இருக்கிறதற்கு, உன்னை ரொம்பவும் கவனமாகப் பார்த்துக் கொண்டிருப்பா......ஹூம்" என்றார்.

அம்பலவாணத்தின் பேச்சில் அசிரத்தை காட்டுவதுபோல் 'ஊம்' கொட்டினார் ராஜரத்ன முதலியார்.

அம்பலவாணம் மறுபடியும், "ஆமாம், ரத்னம்! இப்போ உன் பெண் பெரிய நாயகி மாப்பிள்ளையோடு விஜயவாடாவில் குடித்தனம் பண்ணுறான்னு சொன்னாயே, அங்கே போய் இரண்டு மாசம் இருந்து உடம்பைத் தேற்றிக் கொண்டு வந்தால் என்ன? நீ 'ரிடயர்' ஆகிக் கிராமத்துக்கு வந்ததுக்குப் பிறகு ஒருதடவைகூட அங்கே போனதில்லையே, இந்தச் சந்தர்ப்பத்தை ஒட்டியாவது போய்விட்டு வாயேன்" என்றார்.

"அதெல்லாம் நடக்கிற காரியமா!" என்றார் ராஜரத்னம் அலுப்புடன்.

அம்பலவாணம் விடவில்லை; மேலும் தொடர்ந்து, "ரத்னம், நான் சொல்லுகிறேன் என்று வித்தியாசமாக நினைச்சுக் காதே! உன் நிலைமையிலே நான் இருந்தால் காதும் காதும் வைத்தாற்போல் இரண்டாந்தாரம் கட்டிக்கொண்டு விடுவேன். நீயோ பெரிய உத்தியோகத்திலே இருந்தவன். சொத்து சுதந்திரத்திற்குக் குறைச்சல் இல்லை. தவிர கைநிறைய 'பென்ஷன்' வேறு வாங்குகிறாய். மூத்தாள் குழந்தைகள் இருவரும் அவனவன் அலுவலைப் பார்த்துக்கொண்டு தொலைவில் இருக்கிறார்கள். உனக்குத் தலையைக் காலை வலிச்சா கூட இருந்து கவனிக்க வீட்டிலே சம்சாரம் என்று ஒருத்தி இருந்தால்தான் நீ நிம்மதியாக இருக்கலாம்" என்றார்.

"என்ன, அம்பலவாணம்! இந்த வயசுக்கு மேலேயா என்னை இரண்டாந்தாரம் எடுத்துக் கொள்ளச் சொல்லுகிறாய்?" என்றார் ராஜரத்னம்.

அம்பலவாண முதலியார் "அட நீ ஒரு உலகம் தெரியாத மனுஷனாக இருக்கிறாய். உனக்கென்னப்பா அப்படி வயசாயிடுத்து? இன்னைக்கெல்லாம் இருந்தா ஐம்பத்தாறு, இல்லாவிட்டால், கூட ஒரு வயசு இருக்கும். உன்னை நேரில் பார்க்கிறவர்கள் ஐம்பதுக்கு மேலே மதிக்க மாட்டார்கள். இதைப் போய் ஒரு வயது என்கிறாயே! இன்னொரு சமாசாரம் சொல்லுகிறேன், கேட்டுக்கொள். உங்க தெரு கோடி வீட்டுக் கோதண்டராம முதலியார் போன மாசம் இரண்டாந்தாரம் கல்யாணம் செய்து கொண்டாரே அவருக்கு வயசு என்ன தெரியுமா? அறுபத்து ஆறு" என்றார்.

"அறுபத்து ஆறா?" என்றார் ராஜரத்னம் ஆச்சரியத்துடன்.

அம்பலவாணம் மறுபடியும், "நேற்று ஒரு வேலையாய்க் கோவிந்தபுரத்திற்குப் போயிருந்தேன். அப்போது கோவில் மணியம் மாணிக்க முதலியாரைச் சந்திக்கும்படி ஏற்பட்டது. அவருடைய மூத்த பெண்ணுக்கு இப்போ வயசு பதினெட்டோ, பத்தொன்பதோ ஆகிறது. பெண் கண்ணுக்குப் பார்க்கிறதற்குத் திருப்தியாக இருக்கா; கிராமப் பள்ளிக்கூடத்திலே நாலைந்து 'கிளாஸ்' வரை வாசிச்சிருக்கா; வீட்டுக் காரியத்திலேயும் சோடையில்லை; குடும்பத்துக்குப் பாங்கான பெண். இடம் சரியாக அமைந்தால் அவளை இளையாளாகக் கூடக் கொடுத்து விடுவதற்குத் தயார் என்று மாணிக்க முதலியார் என்னிடம் சொன்னார். நீ ஒரு வார்த்தை சொன்னால் காரியம் முடிந்தாற் போல்தான். அந்தப் பெண்ணை நீ கட்டிக்கொண்டால் அந்த ஏழைக் குடும்பத்திற்கும் ஒரு ஆதரவாக இருக்கும்" என்று கூறி முடித்தார்.

இதற்குள் இருட்ட ஆரம்பித்து விட்டது. 'எதற்கும் யோசித்துச் சொல்லுகிறேன்' என்று அம்பலவாண முதலியாரிடமிருந்து விடை பெற்றுக்கொண்டு வீடு திரும்பினார் ராஜரத்னம்.

அன்றிரவு முழுவதும் அவருடைய அனாதரவான நிலைமையைப் பற்றிய ஏக்கமும் அதைப் பிரதிபலிப்பதுபோல், அன்று மாலை வண்டிக்காரக் கிழவன் மருதமுத்து பேசிய பேச்சும், அம்பலவாணத்தின் யோசனையும், எல்லாவற்றிற்கும் மேலாகக் கோடி வீட்டுக் கோதண்டராம முதலியார் அறுபத்து ஆறு வயதாகியும் தயங்காமல் இரண்டாந்தாரம் எடுத்துக் கொண்டதைப் பற்றி அம்பலவாணம் தெரிவித்த தகவலும் அவர் மனதில் மாறி மாறிப் புரண்டு கொண்டிருந்தன. பொழுது விடிந்ததும் சொந்த நலனை உத்தேசித்து இரண்டாந்தாரம் எடுத்துக் கொள்ள வேண்டியதுதான் என்ற தீர்மானத்துக்கு வந்தார்.

அதைத் தொடர்ந்து அடுத்தவாரம் காதும் காதும் வைத்ததுபோல் அம்பலவாணத்துடன் ராஜரத்னம், கோவிந்தபுரத்திற்குப் போனார். கோவில் மணியம் மாணிக்க முதலியாரின் மூத்த பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்ளுவதற்குத் தம் சம்மதத்தைத் தெரிவித்துவிட்டு வந்தார். பிறகு

பெண்ணுக்குக் கலியாணத்தை ஒட்டித் தாம் போட வேண்டிய நகை வகையறாக்களுக்காக அடுத்த வெள்ளிக்கிழமை ஐந்நூறு ரூபாய் அனுப்புவதாகவும் மாணிக்க முதலியாரிடம் சொல்லிவிட்டுத் தம்முடைய கிராமத்திற்குத் திரும்பினர்.



★

அடுத்த வியாழக்கிழமையும் வந்தது. இரவு சாப்பாடு முடிந்ததும் ராஜரத்னம் மாடியிலுள்ள தம்முடைய அறைக்கு வந்து தாம் இரண்டாம் தடவை கலியாணம் செய்து கொள்ளப் போகிற தகவலையும் அவ்விதம் செய்வதற்குரிய காரணங்களையும் விளக்கி மகன் பாஸ்கரனுக்கும் மகள் பெரிய நாயகிக்கும் நீண்ட கடிதங்கள் எழுதினர். உறையிலிட்டு விலாசம் எழுதி அடுத்த நாள் தபாலில் சேர்ப்பதற்குத் தயாராக அவைகளை மேஜையிலுள்ள 'டிராய'ருக்குள் வைத்துவிட்டுச் சுவரிலிருந்த கடிகாரத்தைப் பார்த்தார். மணி பத்துக்குமேல் ஆகியிருந்தது. மேஜைமேலிருந்த விளக்கை அணைத்து விட்டு வழக்கம்போல் தெருவை ஒட்டிய மாடி வராந்தாவிலுள்ள கட்டிலில் போய்ப் படுத்துக் கொண்டார். ஆனல் படுத்துக் கொண்டவுடன் அவருடைய வருங்கால வாழ்க்கையைப் பற்றித் திட்டம் வகுக்கத் தொடங்கியது அவர் சிந்தனை. அதன் காரணமாக மணி பன்னிரண்டு அடித்தும் கூட ராஜரத்ன முதலியாருக்குத் தூக்கம் வரவில்லை. ஆனல் அதே சமயத்தில் இரவின் நிசப்தத்தைக் கலைத்துக்கொண்டு கீழே இருந்து பேச்சரவம் அவர் காதில் விழுந்தது.

கீழே வாசல் திண்ணையில் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்த சமையற்காரன் தணிகாசலத்தைப் பெயரைச் சொல்லிக் கூப்பிட்டு எழுப்பினன் வண்டிக்காரக் கிழவன் மருதமுத்து.

"என்னப்பா?" என்று கேட்டுக் கொண்டே எழுந்தான் தணிகாசலம்.

"தீப்பெட்டி யிருந்தா கொடு, அப்பா! காத்திலே வண்டியிலிருந்த விளக்கு அணைஞ்சு போச்சு; அதை ஏத்திக்கொண்டு வீடு போய்ச்சேரணும்" என்றான்.

தணிகாசலம் எழுந்திருந்து மாடத்திலிருந்த தீப்பெட்டியை மருதமுத்துவிடம் கொடுத்து விட்டு, "தீப்பெட்டி இதோ இருக்கு. ஆமாம்; இந்த வேளையில் வண்டியை எங்கே ஓட்டிக் கொண்டு போகிறாய்?" என்றான்.

அதற்கு மருதமுத்து, "கோடி வீட்டுக் கோதண்டராம முதலியாருக்கு காலுகாலாக ஒரே காய்ச்சல்; மூடின கண்ணைத் திறக்கவேயில்லை. இப்போதான் டவுனிலிருந்து டாக்டர் ஐயாவைக் கூட்டிக்கொண்டு வந்தேன். நோயாளியைப் பார்த்த பிறகு அவர் வீட்டிலே கொண்டுபோய் விட்டு விட்டு என் வீட்டுக்குத் திரும்பிக்கிட்டிருக்கேன்" என்றான்.

"ஆமாம்; பாதி ராத்திரியிலே டாக்டர் வந்து பார்க்கும்படி நிலைமை அவ்வளவு மோசமாகவா இருக்கு?" என்று கேட்டான் தணிகாசலம்.

"அதை ஏன் கேட்கிறாய்? முதலியாருக்கு இன்னிக்கு இராப்பொழுது கூடத் தாண்டாதுன்னு டாக்டரய்யா சொல்லிவிட்டுப் போகிறார். முதலியாருக்கு வயசு அறுபத்து அஞ்சுக்கு மேலே ஆயிடிச்சு. ஆனல் அவரு போன மாசம் இரண்டாந்தாரமாகக் கட்டிக்கிட்டு வந்தாரே, அந்தப் பெண்ணுடைய நிலைமையை நினைச்சுப் பார்த்தால்தான் வயிறு 'பகீர்'ன்னு பத்திக்கிட்டு எரியுது. இன்னிக் கெல்லாம் இருந்தா அந்தம்மாவுக்குப் பதினெட்டு வயசுக்கு மேலே இருக்காது" என்றான் மருதமுத்து தழுதழுத்த குரலில்.

"இவ்வளவு சின்ன வயசுப் பெண்ணை அந்தக் கிழவருக்கு எப்படித்தான் கட்டிக்

# மகளாவது! மகனாவது!

வெ சீ

பதினைந்து நாட்களாக இடைவிடாமல் அடித்துக் கொண்டிருந்த காய்ச்சலிலிருந்து ராவ்பகதூர் ராஜரத்ன முதலியார் குணமடைந்து இரண்டு மூன்று நாட்கள் தான் ஆகியிருந்தன. வீட்டை விட்டு வெளியே போய்விட்டு வந்தால் மனதுக்குக் கொஞ்சம் தெம்பாக இருக்கும் என்று நினைத்துத் தான் கிராமத்துக்கு வெளியிலுள்ள வாழைத் தோட்டத்தைப் பார்க்கக் கிளம்பினார்.

அப்போது அன்று தபாலில் வந்த இரண்டு கடிதங்களை அவருடைய சமையற்காரன் தணிகாசலம் கீழேயிருந்து மாடிக்கு வந்து கொடுத்துவிட்டுப் போனான். ஒரு கடிதம் அவருடைய பெண் பெரியநாயகியிடமிருந்து வந்திருந்தது. விஜயவாடாவில் வேலையிலிருந்த அவள் புருஷனுடன் இருந்த அவள், அந்தக் கடிதத்தில் ராவ்பகதூரின் காலஞ்சென்ற மனைவியும் தன் தாயுமான மரகதம்மாளுக்குச் சொந்தமான சில பாத்திரங்களை ஒரு கள்ளிப் பெட்டியில் போட்டு விஜயவாடாவுக்கு அனுப்புமாறு கேட்டுக் கொண்டிருந்தாள்.

இரண்டாவது கடிதம், சென்னை சட்டக் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த அவருடைய மகன் பாஸ்கரன் எழுதியிருந்தான். அதில் வழக்கமாக ராஜரத்னம் மாதந்தோறும் அவனுக்கு அனுப்பும் ரூபாயுடன் அந்த மாதம் அவசரச் செலவுக்காக அதிகமாக நூறு ரூபாய் அனுப்பிவைக்கும்படி தெரிவித்திருந்தான்.

ராஜரத்னம் காய்ச்சலாகப் படுத்துக் கொண்டவுடன் அதைப் பிரஸ்தாபித்துத் தம் மகள் பெரியநாயகிக்கும் மகன் பாஸ்கரனுக்கும் எழுதியிருந்தார். ஆனால் அவர்களிடமிருந்து வந்த இவ்விரு கடிதங்களில் அவருடைய உடம்பு நிலைமையைக் குறித்து ஒரு வரி கூட எழுதாமலிருந்தது அவருக்குப் பெரிய ஏமாற்றமாயிருந்தது. ஏன், அவரிடமிருந்து கடிதம் வந்ததாகக்கூட அந்தக் கடிதங்களில் அவர்கள் தெரிவிக்கவில்லை! அந்தக் கடிதங்கள் அவருக்கு ஆறுதல் அளிப்பதற்குப் பதிலாக அவருக்கு அளவிலாத மனத்தாங்கலைக் கொடுத்தன.

மாடியை விட்டுக் கீழே இறங்கி வரும் பொழுது, வாசலில் சமையற்காரன் தணிகாசலம், அந்தக் கிராமத்தில் வாடகைக்கு வண்டி ஓட்டிப் பிழைக்கும் கிழவன் மருதமுத்துவுடன் பேசிக் கொண்டிருந்தது காதில் விழுந்தது.

“என்ன மருதமுத்து, சுமக்க முடியாமல் வைக்கோல் கட்டைச் சுமந்து கொண்டு போகிறாயே, உன் மகனைவிட்டு எடுத்துக் கொண்டு வரச் சொல்லக் கூடாதா? பார்த்தால் பரிதாபமாக இருக்கிறதே” என்று அங்கலாய்த்தான் தணிகாசலம்.

அதற்குக் கிழவன் மருதமுத்து பெருமூச்சுடன் “மகளாவது, மகனாவது! இந்தக் காலத்திலே அதுகளை பெத்து வளர்க்கத் தான் நமக்கு உரிமையுண்டு. வயசு வந்தவுடன் அதது அதனதன் காரியத்திலே தான் குறியாயிருக்கும்” என்றான்.

பின்னால் காலடிச் சத்தம் கேட்கவே தணிகாசலம், ராஜரத்னம் வருவதை அறிந்து பேச்சை நிறுத்திக்கொண்டு வீட்டுக்குள் சென்றான்.

வண்டிக்காரக் கிழவன் மருதமுத்துவின் பேச்சு ராஜரத்னத்துக்கு அவருடைய அனுதாபமான நிலைமையை எடுத்துக் காட்டுவது போலிருந்தது. ஏற்கெனவே சஞ்சலமடைந்திருந்த அவர் மனது அதிகமாகக் குழம்பியது. தன்னுடைய நிலைமையை நினைத்த வண்ணம் வாழைத் தோட்டத்தை அடைந்தார். அடுத்த தோட்டத்தின் சொந்தக்காரருமான அவருடைய பால்ய சிநேகிதர் அம்பலவாண முதலியார் ராஜரத்னத்தைக் கண்டதும், “என்ன அப்பா ரத்னம்! தோட்டப் பக்கம் கொஞ்ச நாளாக உன்னைக் காணவே முடியவில்லையே?” என்றார்.

“இரண்டு வாரமாக ஒரே காய்ச்சல், எனக்கு” என்றார் ராஜரத்னம்.

அவரை நெருங்கிய வண்ணம் அம்பலவாண முதலியார், “அட பாவமே! அது தான் உன் உடம்புகூட இளைச்சிருக்கு! அப்படி ஏதாவது இருக்கணும் என்றுதான் நானும் நினைச்சேன். என்ன பண்ணுவது? உன் சம்சாரம் மரகதம் உயிரோடிருந்தால்,










அல்லும் ஒத்தனன்
பகலும்ஒத் தனன்,—அமர்
பொரு மேல்

வெல்லும் அந்தனை
அல்ல(து) ஒன் றறிகிலா
விற லோன்.

[சொல்லும் அந்தனை அளவையில்: 'கிரீடம் போய் விட்டது' என்று சொல்லும் நேரத்துக்குள்ளேயே: மணி முடி துறந்தான்: ராவணனுடைய கிரீடம் தலையை விட்டுப் போய் விட்டது: முடி போன பிறகு அவனது மனசு எப்படி யிருக்கும்—எல் இமைத் தெழு மதியமும்: மிக்க பிரகாசத்தோடு எழும் பூரண சந்திரனும்: ஞாயிறும்: சூரியனும்; இழந்த அல்லும் ஒத்தனன்: சந்திரனை இழந்த இரவை ஒத்தனன்: பகலும் ஒத்தனன்: சூரியனை இழந்த பகலையும் ஒத்தனன்; யார்? அமர் பொருமேல்: யுத்தத்தில் இறங்கிப் போர் செய்தால் என்பது ஏற்பட்டால்; வெல்லும் அந்தனை அல்லது: வெல்லுதல் என்னும் சொல் அல்லாமல்; ஒன்று அறிகிலா விறலோன்; வேறொன்றை (தோல்வியை) அறியாத மகா வீரனான ராவணன்]

ராவணனுடைய இடிந்த மன நிலையை அறிந்தவராய் வர்ணிக்கிறார் கம்பர்.

நடுக் காட்டூடே இரவில் ஒருவன் நடந்து போகிறான்; பூரண சந்திரனது ஒளியால் பாதையில்லாக் காட்டைச் சமாளித்து நடந்துபோகிறான். போகும்போது இடையில் சந்திரக் கிரகணம் பிடித்து ஒரே இருட்டாய் இருண்டு விடுகிறது காடு. இப்போது வழிப்போக்கன் மன நிலை எப்படியிருக்கும்! இனி:

அந்தக் காட்டின் வழியாக மற்றொரு நாள் பகலிலேயே நடந்து போகிறான் அந்த வழிப்போக்கன். எதிர்பாராதபடி சூரியக் கிரகணம் பிடிக்கிறது. திடீர் என்று இருட்டு சூழ்ந்து கொள்ளுகிறது. வழிப் போக்கனுக்கு பயம், இரவில் இருந்ததைவிட உண்மையில் அதிகமாகவே இருக்கும்.

இந்த விதமாக இரவிலும் பகலிலும் திகில் கொண்ட வழிப் போக்கனது மன நிலைதான் ராவணனது மன நிலை—முடி இழந்து தன்னந் தனியாய்ப் போர்க்களத்தில் நின்றபோது.

உடனே இரண்டு சேனைகளும் கை கலந்து போர் புரியத் தொடங்கின. சிறிது நேரத்தில் போரும் குழப்ப மும் நின்றன. இனி:

ராவணனும் ராமனும் எதிர் எதி ராக நிற்கிறார்கள். ராவணன் தேரில் இருக்கிறான். ராமன் அனுமனது தோளின்மேல் இருக்கிறான்.

முதல்முதலில் ராவணன் அம்புகளை ராமன்மேல் பிரயோகித்தான். அவை களை ராமன் தன் அம்புகளால் தடுத் தான்.

பிறகு ராமனது அம்புகள் கூட்டம் கூட்டமாக அரக்கர்கள் மேலும் குதிரை, யானை, தேர், ஆகிய எல்லாப் படைகள் மேலும் போய் அவைகளைத் துளைத்தன.

ராம பாணங்களைப்போல் வேறு எதையும் அந்தப் படைகள் பார்த்த தில்லை. ஆகவே அவைகளை எதிர்த்து நிற்க முடியாமல் நாலா பக்கமாக ஓட ஆரம்பித்தன அரக்கப் படைகள்.

களம் காலியாய்ப் போய்விட்டது.

ராவணனும் தேரும் மிஞ்சின.

ராவணன் திகைத்து நிற்கிறான் தேரின்மேல். ஆனாலும் தைரியத்தைக் கைவிட்டு விடாமல் தன்னிடத்தி லுள்ள பெரிய பெரிய பாணங்களைப் பிரயோகித்துப் பார்த்தான். அவைகள் எல்லாம் ராமனது அம்புகளால் தெறித்துப் போய்விட்டன.

உடனேயே நாலைந்து தடித்த ஈட்டி போன்ற அம்புகளை வெகு வேகமாய் விட்டான் ராமன். ராவணனது தேரி லுள்ள பொருத்துகளை அதாவது மர்மமான பாகங்களை அந்த அம்புகள் வேகமாய்த் தாக்கின.

பொருத்துவிட்டுச் சுக்குச் சுக்காய் நொருங்கிப் போய்விட்டது தேர். குதித்தான் ராவணன் கீழே. வில் வாள் ஈட்டி முதலான ஆயுதங்களோடு தான் குதித்தான்.

தரையில் அந்த ஆயுதங்களோடு நிற்கிறான்.

மறுபடியும் ராவணன் அம்புகளை எய்தான். ராமனது அம்புகள் முதலில் அந்த அம்புகளை முறித்தன. கடைசியாக ஒரு அம்பு ராவணன் கையிலிருந்த வில்லையே முறித் தெறிந்துவிட்டது.

வில் முறியவும் ராவணன் ஈட்டிகளை வீசி எறிந்தான். அவைகளும் முறிந் தன. கடைசியாக அரையில் கட்டி யிருந்த வாளையே உருவி வீசினான். அதுவும் ராம பாணத்தால் முறிந்து தூளாய்ப் போய்விட்டது.

நிராயுதபாணியாகி விட்டான் ராவணன். இனிமேல் ஒரே ஒரு வேலை தான் பாக்கி என்று சொல்லிக் கொண்டு, ராமன் ஒரு சிறிய அம்பை எடுத்துப் பிரயோகித்தான். அது என்ன செய்தது: ராவணனது கிரீ டத்தை அப்படியே தூக்கிக் கொண்டு எங்கேயோ ஓடிப்போய் விட்டது. எல்லாம் ஒரு வினாடியில்.

சொல்லும் அந்தனை
அளவையில் மணிமுடி
துறந் தான்:

எல் இ மைத்தெழு
மதியமும் ஞாயிறும்
இழந் த



# கம்பர் தரும் காட்சி

டி.கே.சி

## 282. இருண்டு போன பகல்!

ராவணன் யுத்தகளத்துக்குத் தன்னுடைய அரக்கப் படையோடு வந்து சேர்ந்தான்.

ராமனும் புறப்பட்டான்.

யுத்த களத்தில் லக்ஷ்மணன் தன் சேனைகளை முன் அணி பின் அணியாக வகுத்து, பின் அணியின் முகப்பில் நிற்கிறான்.

உலகம் ஏழையுமே அழித்து விடுவதற்கான வீராவேசத்தோடு நிற்கிறான் லக்ஷ்மணன்.



ஊழியின் உருத்திரன்
 உருவு கொண்டுதான்,
ஏழுயர் உலகமும்
 விக்கின் றான் என,
வாழிய வரிசிலைத்
 தம்பி மாப்படைக்
கூழையின் நெற்றிநின்
 றானைக், கூடினான்.

[ஊழியின் உருத்திரன் உருவு கொண்டு: சர்வ சம்கார காலத்தில் ருத்திர மூர்த்தி (சிவ பெருமான்) ஆங்கார தெய்வமாக நிற்கும். அந்த ருத்திர மூர்த்தியின் வடிவாய்; ஏழுயர் உலகமும் விக்கின்றான் என: மேலே வானில் அமைந்துள்ள ஏழு உலக வட்டங்களையும் அழிப்பதற்காக நிற்பது போல; வாழிய வரிசிலைத் தம்பி: வெற்றியுடனேயே வாழ்ந்து வரும் வலிமை பொருந்திய வில்லை ஏந்திய தம்பி லக்ஷ்மணனை; மாப்படைக் கூழையின் நெற்றி நின்றானை: விரிந்த படையோடு கூடிய பின் அணியின் முகப்பில் நின்ற தம்பியைத் தான்; கூடினான்: ராமன் வந்து சேர்ந்து கொண்டான்.

குறிப்பு:—பின் அணியின் முகப்பில் நின்று கொண்டு முன் அணியின் முகப்பில் ராமன் வந்து நிற்க இடம் பண்ணியிருக்கிறான் லக்ஷ்மணன்.

இடம் பண்ணியதே ரஸமாய் இருக்கிறது.]

* * *

ராமன் போர்க்களத்துக்கு வந்துவிட்டான் என்று தெரிந்த மாத்திரத்தில், வானரப் படைகள் ஆரவாரம் செய்தன. அப்படியே அரக்கப் படைகளும் ஆரவாரம் செய்தன.

இரவு முழுதும் கழிந்து, உரிய வேளை வந்ததும்தானே உலகம் விடியப் போகிறது? அதற்கு இன்னமும் எவ்வளவோ நேரமிருக்கிறதே!

கூடத்தில் பேச்சுக் குரல் கேட்டது. அம்மா, தங்கை ராஜத்தினிடம் சொல்லிக் கொண்டிருந்தாள்.

"நம்ப அம்பியோட ஜாதகம் ஹேமலதையின் ஜாதகத்தோடு சரியாயிருக்காம்; கல்யாணி சொன்னுள்...!"

சந்தோஷ உணர்ச்சி என் உடல் முழுவதும் பரவி மயிர்க்கூச்செறிந்தது!

அம்மா தொடர்ந்தாள்:—

"அப்புறம் அந்தப் பெண்ணிடம் கூட அவள் அப்பா அதைச் சொன்னுராம்..."

"என்ன சொன்னுளாம் அவள்?" என்று ராஜம் அம்மாவைக் கேட்டாள்.

"அதுதான் சொல்லிண்டே இருக்கேனே! அந்தப் பெண்ணுக்கு உசிருக்கு உசிரா ஒரு அண்ணு இருந்தானும். போன வருஷம்தான் அல்பாயுசாக, இருபத்திரண்டு வயதிலே டைபாய்ட் ஜுரத்திலே போய்விட்டானும். அவன், நம்ப அம்பி மாதிரியே இருப்பானும். கல்யாணிகிட்டே இதைச்சொல்லி அந்தப் பெண்ணு விசிச்சு விசிச்சு அழுததாம். அம்பி ஜுரமாயிருக்கிற சமயத்திலே இதை அந்த மாமிகிட்டே சொன்னுல் ஏதானும் அச்சான்யமாக நினைத்துக் கொள்வாளே என்று வருத்தப் பட்டாளாம் அவள். கல்யாணி இதையெல்லாம் கொஞ்ச நாழிகைக்கு முன்னுல்தான் என் கிட்டே சொன்னுள்!"

இதற்கு மேலே நான் கேட்க விரும்பவில்லை. ஹேமலதை என்னிடம் எந்த வகையில் தன் பார்வையினுல் அன்பு செலுத்தினுள் என்பதை ஒரு நொடியில் புரிந்து கொண்டு விட்டேன். அவள் பார்வைக்கு அர்த்தமே வேறு அல்லவா?

வெளியே வானம் இடித்துக் குமுறியது; பளிச்சென்று ஒரு மின்னல்.

பின்னர் ஒரே அந்தகாரம்தான்!

என் உவமை பொய்த்துப் போய்விடவில்லை. வெறும் மின்னலினுல் உலகத்தை எப்போதும் ஒளிபெறச் செய்துவிட முடியாதல்லவா?

அயர்ந்தால் படுக்கையில் வீழ்ந்தேன். சோர்வும், அலுப்பும், ஜுர வேகமும் மீண்டும் உடலில் பரவியது.

இருண்டு கிடந்த என் வாழ்க்கையில் தோன்றி மறைந்த ஹேமலதை மின்னல் கொடியான்தான் என்று இலக்கிய ரீதியில் முணுமுணுத்தேன்.

# காலக்ஷேபம்

கண் வைத்தியர்:—ஆறு மாதமாகக் கண்ணுக்கு மருந்து போட்டுக் கொண்டு வருகிறீர்களே, கண் பார்வை இப்போது அபிவிருத்தி அடைந்திருக்க வேண்டுமே! எங்கே, அந்தக் கார் நம்பர் என்னவென்று பார்த்துச் சொல்லுங்கள், பார்க்கலாம்?

நோயாளி:—என்ன அது, காரா! கார் எங்கே இருக்கிறது?

★

பெரிய மனிதர்:—உங்கள் பெண் கல்யாணம் நன்றாய் நடந்ததாமே! நான் வர முடியாமல் போய்விட்டது; மன்னிக்க வேண்டும்.

மற்றவர்:—அடடா! நீங்கள் வரவில்லையா? நான் கவனிக்கவில்லை; மன்னிக்க வேண்டும்!

★

திருட்டுக் கைதி (ஜெயில் வார்டரைப் பார்த்து):—என் சீப்பு காணுமல் போய்விட்டது; இங்கே யாரோ திருடன் இருக்கிருன்!

★

அம்பி:—கவரின் வழியாகப் பார்ப்பதற்கு ஒரு வித்தை கண்டு பிடிக்கப் பட்டிருக்கிறதே, தெரியுமா?

தம்பி:—தெரியாதே, என்ன அது?

அம்பி:—ஜன்னல்!

★

பாடகர்:—வருஷத்திலே முந்நூற்று அறுபத்து நான்கு நாட்களும் நான் சாதகம் பண்ணுகிறேன், ஸார்!

மற்றவர்:—பாக்கி ஒரு நாள் ஓய்வு எடுத்துக் கொள்ளுகிறீர்களாக்கும்!

பாடகர்:—இல்லே, இல்லே......ஒரு நாள் இந்த ஊர் பஜனையிலே நான் பாட வேண்டியிருக்கிறது!

★

"ஒருவன் அணிந்து கொண்டிருக்கும் உடுப்பைக் கொண்டு அவனை மதிப்பிடக் கூடாது......!"

"ஆமாம், அது வாஸ்தவம்தான். அந்த மனிதனின் மனைவி அணிந்து கொண்டிருக்கும் ஆடை ஆபரணங்களைக் கொண்டுதான் அவனை மதிப்பிட வேண்டும்!"



வதை நான் பார்த்துவிட்டேன். அதோடு முடிந்ததா வேலை? இல்லை; இல்லவே இல்லை—ஹேமலதை எப்படி இருந்தாள்?

ஹேமலதை மிகவும் அழகாகக் கொடி மாதிரி துவண்டு, பளபளத்த மேனியளாய், கட்டும் விழிச்சுடரினளாய், வாலைக் குமரியாய் என் கண்ணெதிரே காட்சியளித்தாள்!

அவள் என்னைப் பார்த்த பார்வையில் அன்பும் ஆதுரமும் கலந்திருந்தன. வெறும் அநுதாப உணர்ச்சியுடன் கூடிய பார்வை அல்ல அது! அதற்கு இன்னும் ஏதோ ஒரு வியாக்யானம் இருந்தது. ஒரு வேளை...... காதல் பார்வையோ? எப்படி வேண்டுமானாலும் இருக்கட்டும். அவள் முகம் என் நினைவிலிருந்து அகலப் போவதில்லை! அதற்கு அவசியம்......?

அவளைப்பற்றி அன்றைக்கு நான் அம்மாவிடம் அதிகப்படியாகத் தெரிந்து கொண்டது, அவளுக்கு இன்னும் விவாகமாகவில்லை என்பதே!

பிறகு நடந்தது:—

உடல் நிலை சரியாக இல்லாததின் காரணமாக ஆபீசிற்குப் பத்து நாட்கள் லீவு போட்டு விட்டேன்.

ஹேமலதை எதிர்வீட்டிலிருந்த கல்யாணிக்குப் புக்ககத்து உறவு. தஞ்சை ஜில்லா வாசி அவள். 'பட்டணம் பார்க்க' அவள் அப்பாவுடன் வந்திருந்தாள். கல்யாணியின் புருஷர் இந்தப் பெண் விஷயமாகத்தான் எப்போதோ என் பெற்றோரிடம் என்னுடைய ஜாதகத்தைக் கூடக் கேட்டாராம். பின்னர் அது தொடர்ந்து பேரம் செய்யப்படவில்லை.

இந்த இடத்தில் என்னைப் பற்றியும் சொல்லிவிட வேண்டியது அவசியமே!

நான் மத்திய சர்க்கார் ஆபீஸ் ஒன்றில் குமாஸ்தா; இருபத்தி மூன்று வயதுப் பிரம்மசாரி.

எப்போதுமே எனக்குப் பூஞ்சை உடம்புதான். பொதுவாக என்னிடம் ரொம்பவும் கவர்ச்சியில்லை. 'கோரம்' என்று பிறர் தலைமறைவாகச் சொல்லியிருப்பதை நான் அறிவேன். காதலில் எனக்கு அதிக நம்பிக்கை கிடையாது. அதற்காக வாழ்வின் இன்பத்தை நுகர ஆசைப்படாமல் பிரும்மசரியத்தின் எல்லைகளுக்குள்ளேயே ஒரு அசாதாரண வாழ்க்கையை வகுத்துக் கொண்டு வாழ்நாள் முழுதும் அவஸ்தைப்பட நான் விரும்பவில்லை.

ஹேமலதையைப் போன்ற ஒருத்தியாயிருந்தால் ...... அது வரவேற்கப்பட வேண்டிய விஷயமாயிற்றே!......அல்லது யாரோ ஒருத்தி என் வாழ்க்கைக்கு இன்றியமையாதவள் என்பதை நான் உணர்ந்திருந்தேன்.

அந்த நினைப்பின் உச்சத்தில்தான் என் வாழ்க்கை இருண்டு கிடப்பதாக நான் நினைத்தேன். தாம்பத்யத்திற்கு எது முக்கியம் என்கிற பெரிய பிரச்னைகளைப் பற்றியெல்லாம் நான் நிறையப் படித்தவன்தான்.

ஆனால் புஸ்தகங்கள் மாத்திரம் ஒருவனுடைய வாழ்க்கையை ஒளிபெறச் செய்து விட முடியுமா?

நான்கு தினங்கள் கழித்து:—

ஹேமலதையும் நானும் இதுவரை நாலைந்து முறைகள் சந்தித்துக் கொண்டு விட்டோம். அவள் என்னைக் காதலிக்கிறாள் என்று நான் நம்பினேன்.

அன்றைக்கு ஏதோ உற்சவம். வீதியில் முருகப் பெருமான் பவனி வந்துகொண்டிருந்தார். எதிர்வீட்டு வாசலில் கல்யாணியும் ஹேமாவும் சுவாமி தரிசனத்திற்காக நின்று கொண்டிருந்தனர். என் அறையிலிருந்தபடியே நான் அவர்கள் என்னைக் கவனியாத முறையில் நின்று கொண்டிருந்தேன். வாசற்புறம் என் இருகத்திலுள்ளவர்கள் யாவரும் இருந்தும், ஹேமலதையின் கண்கள் இன்னும் யாரையோ எதிர்பார்த்துத் தேடின! அது யார்?

என்னைத் தவிர வேறு யார்?

அவள் அவஸ்தை எனக்குச் சிரிப்பை உண்டு பண்ணிற்று.

'ஹேமா, நான் இங்கே இருக்கிறேனே, உனக்குத் தெரியவில்லையா? என்னிடம் நிச்சயமாக நீ காதல்தான் கொண்டு விட்டாய். என் வாழ்வை விளங்கச் செய்ய நீ தயாராயிருக்கிறாயா? இதோ என்னைப் பார்!'

என் மனம் கிடந்து தவித்தது. என்னையுமறியாமல் நான் அவர்களுக்குத் தெரியும்படியாக நின்று கொண்டிருந்தேன் இப்போது. பெண்களின் கண்களுக்கு இவ்வளவு சக்தியிருக்கும் என்பதை நான் அநுபவ பூர்வமாக உணர்ந்தவனல்ல; ஆனால் அவள் என்னைப் பார்த்த பார்வை......!

ஆகா! அத்தினத்தை நான் மறக்க முடியவே முடியாதுதான்!

* * *

அம்மா என் கலியாணப் பேச்சைக் கல்யாணி தனித்திருக்கும் சமயமாகப் பார்த்து எடுத்தாள். அதன் பலன் ஜாதகங்கள் கை மாறின.

ஹேமலதையின் சம்மதம் இந்த விவாகத்திற்கு எந்த அளவில் இருக்கும் என்பதைப் பற்றி நான் கவலைப்பட்டவனே அல்ல.

எனக்குத் தெரியாதா, அவள் மனம்? அதைத்தான் அவள் முகமே எனக்குச் சொல்லிவிட்டதே!

பொங்கி யெழுந்த உற்சாகத்தில் விரைவாக என் உடல் குணமடைந்து விட்டது. மனமும் நிம்மதியடைந்திருந்தது.

கடைசி நாள்:—

நாளைக்கு நான் ஆபீசிற்குச் செல்ல வேண்டும். ஆபீசை நினைத்தாலே சங்கடமாய் இருந்தது. முதல் தேதி கொடுக்கிற சம்பளத்தைத் தவிர ஆபீசில் வேறு என்னதான் நன்றாக இருக்கிறது?

ஆனாலும் இந்தப் பத்து நாளைய லீவில் ஏதோ ஒரு பெரிய சாதனை நடந்துவிட்ட மாதிரி ஒரு பிரமை.

ஹேமாவும் அவள் தகப்பனாரும் இன்று பட்டணம் பார்த்துவிட்டு ஊருக்குத் திரும்புகின்றனர். அவளை நாளை முதல் பார்க்க முடியாது என்று நினைத்தபோது ஏதோ ஒன்று நெஞ்சை யடைத்தது.

பிற்பகலில் என் அம்மாவிடமும், தங்கைகளிடமும் சொல்லிக் கொண்டு போக வந்தாள் ஹேமலதை.

என்னிடம் கூடத்தான்!

தன் பார்வையை என் பக்கம் வீசி யெறிந்து விடை பெற்றுக் கொள்ளத் தவறவில்லை அவள். என்ன இருந்தாலும் எனக்கு வரப் போகிறவள்......சீ, அதற்குள் பாத்தியதையா ......?

அவள் விழிகளின் கருத்தை வாய் சொல்லி யிருந்தால் கட்டாயம் இதைத் தான் சொல்லியிருக்கும்.

'ஊருக்குப் போகிறேன் என்று கவலைப்படாதீர்கள்! என் உள்ளத்தை உங்களிடம் ஒப்படைத்து விட்டுத்தான் செல்கிறேன். உங்கள் கை பிடித்து, காரியம் யாவினும் கை கொடுத்து ஊக்குவேன் நான்! இதை நீங்கள் நம்பலாம்.'

அவள் பேசியிருந்தால் இப்படித்தான் பேசி யிருப்பாள்!

இரவு:—

அவள் சென்று விட்டாள் ஊருக்கு! எதையோ பறி கொடுத்தவன் போல் தூக்கம் வராமல் ஜன்னலருகே நின்று கொண்டிருந்தேன்.

வெளியே, அன்றையதினம் போலவே இருட்டுத்தான். மழை வரப் போகிறதென்று கட்டியம் கூறிக் கொண்டு இருள் படர்ந்திருந்தது.

என் வாழ்க்கை கூட இப்படி இருக்கிறதென்று அன்று நினைத்துக் கொண்டதை எண்ணிப் பார்த்து நான் இப்போது சிரித்துக் கொண்டேன். சே! என் வாழ்க்கை இவ்வளவு கேவலமாகவா இருக்கிறது......சே, சே!

இருண்ட வெளிப்புறத்தை நோக்க எனக்கு அருவருப்பாக இருந்தது. இருள் நீங்கிப் பகலைக் காண வேண்டும் என்ற ஆசை ஏனோ எனக்கு உதித்தது. ஆனால் அவ்வளவு சீக்கிரத்தில்—நினைத்த மாத்திரத்தில் இருள் விலகிவிடுமா?

# Stanes

## சிவப்பு லேபிள் கலப்பற்ற காப்பி

**பிரசித்திபெற்ற ஸ்டேன்ஸ் கம்பெனியார்**
**தயாரிக்கும் ஓர் விலை குறைந்த ரகம்**

**1, 2, 3, 7, 14, 20 ராத்தல்**
**டின்களில் கிடைக்கும்**




நற்செய்தி! ஸ்டேன்ஸ் கம்பெனியாரின் மனோகரமான சிவப்பு லேபிள் கலப்பற்ற காப்பி இப்பொழுது ஏராளமாக கிடைக்கிறது.
தாங்களே பொடி செய்ய விரும்புபவர்களுக்கு, மிகவும் ஜாக்கிரதையாக பொறுக்கி, வறுத்த ஸ்டேன்ஸ் காப்பிக் கொட்டைகளும் கிடைக்கின்றன.

**தருவிக்கும் செலவின்றி இவைகளை பிரத்தியேகமாக பெறுங்கள்**

சிறந்த ரக காப்பிக் கொட்டைகள், பீபெரி, தட்டை எக்ஸ்ட்ரா போல்டுகள் 10, 80 ராத்தல் பைகளில், விலை விகிதங்களுக்கும் விவரங்களுக்கும் தி. யுனைடெட் காப்பி சப்ளை கம்பெனி லிமிடெட், கோயம்புத்தூருக்கு எழுதுங்கள்.

தென் இந்தியாவின் சிறப்பு




மதுரைக்கு ஏஜண்டுகள்:
ஸ்ரீ ஸ்டேன்ஸ் காப்பி & ஜெனரல் ஏஜன்சி
77, அம்மன் சந்நிதி தெரு

வேலூருக்கு ஏஜண்டுகள்:
மெஸர்ஸ். விஸ்வம் பிரதர்ஸ்
கமிஸரி பஜார்

# அது என்ன பார்வை?

பாலு

இரண்டு நாட்களாக விடாமல் அடித்துக் கொண்டிருந்த ஜுரம் அன்றைய தினம் மட்டுப்பட்டிருந்தது.

படுக்கையில் இருக்கை கொள்ள வில்லை எனக்கு. தொடர்ச்சியாக எப்போதும் படுத்துக் கொண்டிருப்பது வேதனையாகக் கூட இருந்தது. இரவு பத்து மணிக்கு மேலிருக்கும் அப்போது.

'ஜிலுஜிலு' வென்று அடிக்கும் ஊதக் காற்றில் சிந்தனையில் லயித்தவனாக ஜன்னலருகே நிற்பதை அம்மா பார்த்து விட்டால் ஏதாவது சொல்வாளோ என்ற பயம் வேறு எனக்கு. நல்ல வேளையாக, வீட்டின் நபர்கள் ஆழ்ந்த நித்திரையில் இருந்தனர்.

எதிர்ப்புறத்துச் சாலையிலுள்ள வேப்ப மரம் ஒன்று காற்றில் பரத நாட்டியம் பயின்று கொண்டிருந்தது. இடையிடையே வானத்தின் குமுறல் வேறு.

வெளியே நல்ல மழை; இருட்டு.

என் வாழ்க்கைகூட அந்தகாரம் சூழ்ந்திருக்கிற வெளி உலகைப் போல் இருப்பதாக நான் நினைத்தேன்.

சரியான உவமைதான்!

திடீரென்று வானத்தில் 'பளிச்' சென்று ஒரு மின்னல்! அந்தகாரம் அமோகமாகப் படர்ந்திருக்கும் அந்த அவவேளையில், தேவலோகத்திலிருந்து மின்னல் கொடியாள் ஒருத்தி உலகம் முழுவதையும் தன்னுடைய ஜீவ ஒளியினால் ஒரு கண நேரம் நிரந்தர ஒளிப்பிழம்பாகச் செய்துவிட்டுப் பின்னர் மறைகிற மாயம் தானோ அது?

மின்னலுக்குப் பிறகு இருட்டைப் பார்ப்பதற்குப் பயமாகக்கூட இருந்தது எனக்கு.

என் வாழ்க்கையை அந்த இருட்டிற்கு ஒப்பிட்டுப் பார்த்த பிறகு, மின்னல் மின்னி மறைந்த காட்சியை எதன் சூசனை என்று கொள்வது என்ற புதிய சிந்தனை மனத்தில் தோன்றியது.

மீண்டும் படுக்கையில் வந்து படுத்தேன். காலையில் ஏற்பட்ட புது அனுபவத்தில், மனம் ஒன்றிப் போய்க் கிடந்தது.

* * *

அன்று காலைச் சம்பவம் :—

பார்லி கஞ்சி சாப்பிட்டுவிட்டு அறையில் படுத்திருந்தேன். வெளிப் புறத்து ஹாலில் புதிய குரல்கள் கேட்டன. என் தங்கைகளும், அம்மாவும் யாரோ ஒரு புதிய நபருக்கு வரவேற்பு அளித்துக் கொண்டிருந்தார்கள். பேச்சின் போக்கிலிருந்து எதிரகத்துக் கல்யாணி அழைத்து வந்திருக்கும் ஒரு புதிய பெண்தான் ஹாலில் பரிணமித்த பரபரப்புக்கும் கலகலப்புக்கும் உற்சாகத்துக்கும் ஊர் வம்புக்கும் காரணமெனத் தெரியவந்தது.

புது நபருக்குப் பாடத் தெரியும்போலிருக்கிறது; அரங்கேற்றமும் ஆரம்பித்தது.

பெண்ணின் முகம் எப்படியோ! ஆனால் அவள் குரல்? கவிஞர்களின் பாஷையிலே அது குயிலினுமினிய குரலேதான்!

"எப்போ வருவாரோ?" என்று அவள் அழகாகக் குரலெடுத்துப் பாடிய பாட்டில் இருந்த நயமும் குழைவும், யாரையோ நிஜமாகவே எதிர்பார்த்து ஏங்கி அழைப்பது போலிருந்தது.

பாட்டைக் கேட்டதும் என் உடலில் பரபரப்பு தோன்றியது. "இதோ வந்து விட்டேன்" என்று ஜுரமடித்த உடம்புடன் அவளுக்குக் காட்சி யளிக்கலாமா என்று அசட்டுத்தனமாகக்கூட நினைத்தேன்.

நான் உள்ளே இருப்பது அவர்களுக்கு அறிவிக்கப்படவில்லை போலும்!— பேச்சுக் கச்சேரி தொடர்ந்தது.

அவள் பெயர்...ஆகா! அந்தப் பெயரில் தான் எவ்வளவு இனிமை! ஹேமலதை!!

ஆனால் அவள் தோற்றம் எப்படியிருக்குமோ? சில கதைகளில் வருகிற மாதிரி அந்தத் தெய்விகக் குரலின் உடலமைப்பு எதிர்பார்த்ததற்கு மாறாக, அவலக்ஷணம் பொருந்தியதாக இருக்குமோ?

அவள் அழகாய் இருந்தாலென்ன, இல்லாவிட்டாலென்ன, நான் ஏன் அதைப் பற்றி அவஸ்தைப்பட வேண்டும் என்றெல்லாம் நினைத்தது உள்ளம்.

இருந்தாலும் புதிய நபரைப் பார்க்கத் தான் வேண்டும் என்று என்னுள் ஏதோ ஒன்று அறிவுறுத்தியது.

கல்யாணியும், ஹேமலதையும் தங்கள் வீட்டுக்குக் கிளம்பும்போது எனக்கிருந்த அவசரத்தில் அவர்கள் கண்களில் பட்டு விட்டேன். அம்மாவுக்கும் தங்கைகளுக்கும் இதில் கோபம்தான்!

இவ்வளவு நேரமும் உள்ளே 'புருஷான்' இருக்கும்பொழுதா இப்படிக் கொட்ட மடித்தோம் என்கிற வேதனையின் உணர்ச்சி அவர்கள் முகத்தில் படரு

டைய தயவையும் கோராமல் தனக்கு வேண்டியவைகளைத் தானே செய்து கொண்டு மறுநாளே ஊருக்குக் கிளம்பினான்.

"உங்களிடம் சொல்லுவதற்கு எனக்கு வெட்கமாக இருக்கிறது......ஏழு மாதங்களாவது இங்கே தங்கியிருக்கும்படி அம்மா சொல்லுகிறாள்" என்றாள் ராதை.

"ஏன்?" என்று கேட்டான் ரகுராமன்.

"......நான்......நான்......ஸ்நானம் செய்து மூன்று மாதங்களுக்குமேல் ஆகிவிட்டது. பிரசவம் ஆகி முடிந்ததும் போகலாம் என்று அம்மா சொல்லுகிறாள். நமக்கு அங்கே வேறு யார் துணைக்கு இருக்கிறார்கள்?" என்றாள் ராதை.

"நிஜமாகவா, ராதை? இத்தனை நாட்கள் என்னிடம்கூடச் சொல்லாமல் மறைத்து வைத்திருந்தாயாக்கும்!" என்று உணர்ச்சிப் பெருக்கில் கூறினான் ரகுராமன்.

"போங்கள்! இதையெல்லாம் யாராவது புருஷர்களிடம் சொல்லிக் கொண்டிருப்பார்களா, என்ன?" என்றாள் ராதை.

அவ்வளவுதான்; மாமனார் செய்த அவமரியாதைகள் அத்தனையையும் அவன் மறந்துவிட்டான். எதிர்பாராத விதமாக உண்டான புது மகிழ்ச்சியுடன் அவன் ஊருக்குத் திரும்பி வந்தான்.



"டாக்டர் ஸார்! எனக்கு அடிக்கடி ஞாபகமறதி ஏற்படுகிறது; நல்ல மருந்து இருந்தால் கொடுங்க!"

"அதற்கென்ன, தருகிறேன். முதலில் ஞாபகமாக நீங்கள் 'கன்ஸல்ட்டிங் பீஸ்' கொடுத்துவிடுங்கள்!"

4

**ப**த்துப் பன்னிரண்டு நாட்கள் எப்படியோ கழிந்தன. ஒரு நாள் ரகுராமன் ராதை வைத்திருந்த ரோஜாச் செடிக்குத் தண்ணீர் ஊற்றிக் கொண்டிருந்தான். அந்தச் செடியில் ஒரு மொட்டு அரும்பியிருந்ததைக் கண்டதும் அவன் மனம் பெருமையடைந்தது. ஆனால் எவ்வளவோ ஆசையோடு வளர்த்து வந்த அந்த ரோஜாச் செடியின் முதல் பூவைச் சூட்டிக் கொள்ள ராதை இருந்தால்தானே?

இதே நினைவில் அன்று முழுவதும் அவன் வெளியே கிளம்பவில்லை. பத்திரிகையைப் புரட்டிக்கொண்டே படுத்திருந்தான்.

திடீரென்று வாசலில் ஏதோ வண்டி வந்து நிற்கும் சத்தம் கேட்கவே அவன் திடுக்கிட்டான். ஒரு வேளை ராதையே திரும்பி வந்திருக்கலாமோ......?

ஆவலுடன் எழுந்து சென்று பார்த்தான்; ராதைதான் வண்டியிலிருந்து இறங்கி வந்து கொண்டிருந்தாள்!

"இதற்குள் ஏன் வந்து விட்டாய், ராதை?"

"ஆமாம், வந்து விட்டேன்!" என்று ராதை வெறுப்புடன் சொன்னாள்.

"உனக்கு அங்கே இருப்பதற்குப் பிடிக்கவில்லையா?"

"பிடிக்காததால்தான் வந்துவிட்டேன். உங்களுடைய மனசுக்கு விரோதமாக நான் நடந்து கொண்டதற்குக் கைமேல் பலன் கிடைத்து விட்டது......"

பாவம், அபலைப் பெண் அவள்; தன்னால் பிறந்தகத்துச் சுகத்தை இழந்ததோடு, ஏதோ அவமானமும் அடைந்திருக்கிறாள்!

அவளுடைய மனத்தை மாற்ற, "ராதை, உன்னுடைய ரோஜாச் செடி பூத்து விட்டது!" என்றான் ரகுராமன்.

"பூத்து விட்டதா! பூவைப் பறித்துவிட்டீர்களா, இல்லையா? முதல் பூவை லக்ஷ்மியின் படத்திற்குச் சூட்ட வேண்டுமென்று இருந்தேனே......"

"ஏன், முதல் பூவை நீதான் சூட்டிக் கொள்ளேன்!"

"மாட்டேன்; லக்ஷ்மி படத்திற்குத்தான் சூட்டுவேன்......?"

"நீ என் லக்ஷ்மிதானே?"

இருவரும் வாய்விட்டுச் சிரித்தார்கள். கலகல வென்ற அந்தச் சிரிப்பின் ஒலி எத்தனையோ அர்த்தங்களை உதிர்த்தது.

சிறு வயது முதற் கொண்டு அவனை எவ்வளவோ சிரமப்பட்டு வளர்த்து வந்தாள். ரகுராமனின் 'ஹைஸ்கூல்' படிப்பு முடிவடைவதற்கும் சீதாலக்ஷ்மி அம்மாளுக்கு வாழ்க்கைப் போராட்டம் அலுத்துப் போவதற்கும் சரியாயிருந்தது. அத்துடன் படிப்பை முடித்துவிட்டுத் தன் மகனை உத்தியோகத்தில் அமர்த்துவதைத் தவிர அவளுக்கு வேறு வழியில்லாமற் போய்விட்டது. ஆனால் தெய்வச் சித்தம் என்று ஒன்று தனியாக இருக்கிறதல்லவா? அந்தத் தெய்வச் சித்தம்தான் அவனை அதிர்ஷ்ட தேவதையுடன் அறிமுகப்படுத்தி வைத்தது.

ஒரு நாள் சாயங்காலம் ஸ்ரீமான் ரங்கநாதன் தம் காரில் 'போய் ராவ்ஸாஹிப் ரங்கநாதனாக மாறித் திரும்பி வந்து கொண்டிருந்தார். அன்றுதான் வெகு நாட்களாகக் கனவு கண்டு கொண்டிருந்த ராவ்ஸாஹிப் பட்டம் அவருக்குக் கிடைத்திருந்தது. அந்த சந்தோஷத்தில் தெரு வழியாகப் போய்க்கொண்டிருந்த ரகுராமன் அவருடைய கண்களுக்குத் தென்படவில்லை. ஆகையால் அவருடைய கார் பறந்து கொண்டிருந்த வேகத்திற்கு இடையூறாகக் குறுக்கே வந்த ரகுராமன் தாக்கி எதிர்ப்படவே, தாம் பூலோகத்தை விட்டு ஒரு அங்குலம்கூட நகரவே இல்லை என்பதை உணர்ந்தார் ரங்கநாதன். அதன் பலனாகத்தான் ரகுராமன் 'இண்டர் மீடியட்' படித்ததும், அவருடைய ஜேஷ்ட புத்திரியான சௌபாக்கியவதி ராதையை மனைவியாக அடைந்ததும்! இதை அதிர்ஷ்டம் என்று சொல்லாமல் வேறு என்னவென்று சொல்வது?

ரகுராமனுடைய இஷ்டப்படி அவனைப் படிக்க வைப்பதாக ராவ்ஸாஹிப் ரங்கநாதன் ஒப்புக் கொண்டது உண்மைதான். ஆனால் அவன் அவருடைய விருப்பங்களின்படியே நடந்து கொள்ள வேண்டும் என்ற நிபந்தனையை அனுசரிக்க அவன் தயாராக இல்லை. ஏனெனில் அவனாக ராவ்ஸாஹிப் ரங்கநாதனின் காலில் வந்து விழுந்து ராதையைக் கல்யாணம் செய்து கொடுக்கும்படி கேட்கவில்லையே!

அன்று நடந்த சம்பவம் அவன் மனதை விட்டு இன்னும் அகலவில்லை. மணி பத்து அடித்து விட்டது. ரகுராமன் காலேஜுக்குப் போவதற்காகத் துடித்துக் கொண்டிருந்தான். காலேஜுக்கும் அவனுடைய வீட்டிற்கும்—மாமனார் வீடுதான்—கிட்டத்தட்ட ஒன்றரை மைலுக்கு மேல் இருக்கும். சாப்பிட்டு விட்டு அரை மணி நேரத்திற்குள் காலேஜுக்குப் போயாக வேண்டும். கடிகாரத்தைப் பார்க்கப் பார்க்க அவனுக்கு ஆத்திரம் பொங்கி வந்தது.



கோபத்தை வெளியே காட்டிக் கொள்ள முடியாமல் ராதையை அழைத்தான். அந்த வீட்டில் அவனுக்காகப் பரிந்து பேசும் ஒரு ஜீவன் இருந்தது என்றால் அது ராதைதான்! உண்மையிலேயே அவன் அவளிடம் மனமார அன்பு கொண்டிருந்தான். தன்னுடைய பெற்றோர் அவன் விஷயத்தில் பாரபட்சமாக நடந்து கொள்ளும் விதம் அவளுக்குச் சிறிதும் பிடிக்காமலிருந்தது. பல்லைக் கடித்துக் கொண்டு எவ்விதமாகிலும் மற்றொரு இரண்டு வருஷ காலத்தைக் கழித்து விட்டால் அப்புறம் யாரையும் லட்சியம் செய்யவேண்டிய அவசியம் இல்லை என்கிற மனோபாவம் அவளுடைய பொறுமைக்குப் பலத்த அஸ்திவாரமாக இருந்து வந்தது.

அன்று தன்னுடைய கணவன் கூப்பிட்டதும் சாதத்தை வடித்துக்

கொண்டிருந்த ராதை எழுந்து சென்றாள். அதற்குள் அவளுடைய தகப்பனார் ராதையைக் கூப்பிட்டார்.

“இன்னுமா சாதம் வடித்தாகவில்லை?” என்று ரகுராமன் கொஞ்சம் கோபமாகவே கேட்டு வைத்தான்.

ராதை அவனுடைய கோபத்தைத் தணிப்பதற்காகச் சிரித்துக் கொண்டே, “இதோ ஆகிவிட்டது. வாருங்கள், இலை போடுகிறேன்!” என்றாள்.

ஆனால் அதே சமயத்தில் ராவ்சாஹிப் ரங்கநாதனின் கடுமையான குரல் இருவருக்கும் அதிர்ச்சியை அளித்தது.

“ராதை, மாப்பிள்ளை கொஞ்சம் பொறுத்துச் சாப்பிடலாம். என்னுடைய சிநேகிதர்கள் இரண்டு பேர் வெளியூரிலிருந்து வந்திருக்கிறார்கள். முதலில் அவர்களுக்குச் சாப்பாடு பண்ணி வைக்க வேண்டும். அப்புறம் இன்னொரு தடவை சமைத்து நீங்கள் இருவரும் சாப்பிடலாம்” என்று சொல்லிவிட்டு, வந்திருந்த விருந்தினர்களை உள்ளே அழைத்துக் கொண்டு வருவதற்காகத் திரும்பினார் ரங்கநாதன்.

இந்தத் தர்ம சங்கடமான நிலைமையை உணர்ந்த ராதை மெதுவாக, “அவருக்குக் காலேஜுக்கு நேரமாகிவிடவில்லையா, அப்பா? வந்திருப்பவர்களைத்தான் அரை மணி நேரம் பொறுத்துக் கொள்ளச் சொல்லுங்களேன்!” என்றாள்.



நடந்தது அவ்வளவுதான்; கண்மூடிக் கண் திறப்பதற்குள் ராவ்சாஹிப் விசுவரூபம் பெற்று விட்டார். மேஜைமேலிருந்த ரகுராமனின் புத்தகங்கள் மூலைக்கொன்றாகப் பறந்து சென்றன. “அவன் காலேஜுக்குப் போய்ச் சம்பாதித்துக் கொண்டு வந்து கொடுத்துத்தான் இங்கே குடித்தனம் நடக்க வேண்டும் என்கிறதில்லை. அப்படிக் குடி முழுகிப் போகிற அவசரமானால் ஹோட்டலில் சாப்பிட்டு விட்டுப் போகட்டுமே!” என்று இரைந்தார் ரங்கநாதன்.

ரகுராமனின் கண்களில் நீர் சுரந்தது. எவ்வளவு கஷ்டப்பட நேர்ந்தாலும் சரி, இதற்குமேல் ஒரு நிமிஷம்கூட இந்த வீட்டில் தங்கியிருப்பதில்லை என்ற முடிவுக்கு அவன் வந்தான்.

அன்று மாலை காலேஜிலிருந்து வந்ததும் அவன் ராதையைக் கூப்பிட்டான். அதுவரை அவள் அழுது கொண்டிருந்திருக்கிறாள் என்பதை அவளுடைய சிவந்த கண்களிலிருந்து அறிந்து கொண்டான். அவளுடைய விருப்பத்தையும் அனுசரித்து மறுநாளே தனிக் குடித்தனம் செய்ய ஆரம்பித்து விட்டான்.

அதுமுதல் தன் பிறந்தகத்துப் பேச்சை எடுத்தாலே ராதை சீறி விழுவாள். அப்படியிருந்தவள் இப்போது தங்கைக்குக் கல்யாணம் என்று கடிதம் வந்ததும் எவ்வளவு தூரம் மாறிப் போய் விட்டாள்!

## 3

மறுநாள், “கல்யாணத்தன்று எப்படியும் நீங்கள் வந்துவிடுங்கள். வரவில்லையென்றால் அப்பாவுக்குச் சந்தோஷமாக இராது” என்று ரயிலில் இருந்தவாறு ராதை சொன்னாள்.

“சரி, ராதை! அவசியம் வருகிறேன்” என்றான் ரகுராமன்.

ராதையிடம் சொன்னபடி கல்யாணத்தன்று தன் மாமனார் வீட்டை அடைந்தான் ரகுராமன். அவனைக் கண்டதும், “நீங்கள் வர மாட்டீர்கள் என்றல்லவா நினைத்துக் கொண்டிருந்தேன்!” என்று விஷமத்தனத்துடன் சொல்லிக் கொண்டே அவனை வரவேற்றார் ராவ்சாஹிப் ரங்கநாதன். மாமனாரின் பூடகமான வார்த்தைகள் அவனுக்கு மிகுந்த மனவேதனையை அளித்தன. எவரு

# மலர்ந்த ரோஜா



பத்ருசாமி

ரகுராமன் அப்பொழுதுதான் ஆபீஸிலிருந்து வீட்டிற்குத் திரும்பி வந்திருந்தான். சட்டையைக் கழற்றி ஆணியில் மாட்டி விட்டு, கடந்துவந்த சிரமத்திற்குப் பரிகாரமாக நாற்காலியில் சாய்ந்து கொண்டான்.

பக்கத்து மேஜையின் மேலிருந்த கடிதம் அவன் கண்களில் பட்டது. அதை எடுத்துப் படிக்கலாமா என்று அவன் யோசித்துக் கொண்டிருக்கையிலேயே காப்பியும் கையுமாக ராதை கூடத்திற்கு வந்து, "கடிதத்தைப் பார்த்தீர்களா?......அப்பா எழுதியிருக்கிறார். உங்கள் மைத்துனி பிரேமாவுக்குக் கல்யாணம் நிச்சயமாகியிருக்கிறதாமே!" என்றாள் மகிழ்ச்சியுடன்.

ரகுராமனுக்கும் இந்தச் செய்தி கண நேரம் சந்தோஷத்தைக் கொடுக்கத்தான் செய்தது. ஆனால் என்றும் மறக்க முடியாத அவமானங்கள் பலவற்றை இழைத்தவர்களுடைய அழைப்பு, வெறும் கடமைக்காக அனுப்பப்பட்டதாகவும் இருக்கலாம் என்கிற நினைவு அவனுக்குள் தோன்றியது. மறுவிநாடி கையிலிருந்த காப்பியில் பாதி மட்டும் குடித்துவிட்டு டம்ளரைக் கீழே வைத்தான். ராதையின் வதனத்தில் எப்பொழுதுமில்லாத உற்சாகம் ததும்பிக் கொண்டிருந்ததைக் கவனித்ததும் அவன் மனம் பின்னும் சுருங்கத் தொடங்கிவிட்டது. அவளுடைய விருப்பத்தை அறிய முயற்சிப்பவன்போல், "அப்பாவே எழுதியிருக்கிறாரா, ராதை? அப்பொழுது அவசியம் போக வேண்டியதுதான்!" என்றான் கேலியாக.

"பின், நாம் கல்யாணத்திற்குப் போக வேண்டாமா?"

"உன்னைப் போகவேண்டாமென்று நான் தடுக்கவில்லையே! நீ போவதில் எனக்கு ஒரு ஆட்சேபணையும் கிடையாது. நாளைக்கே வேண்டுமானாலும் கிளம்புவதற்கு ஏற்பாடு செய்துகொள்; எனக்குச் சம்மதம்."

"நீங்கள் வராவிட்டால் நானும் போகவில்லை. நான் தனியாகப் போனால் பார்ப்பவர்களுக்கு நன்றாயிராது."

"இல்லை, ராதை! எனக்கு இப்போது ஆபீஸில் லீவு கொடுக்கமாட்டார்கள். முடிந்தால் கல்யாணத்திற்கு முதல் நாளே நான் அங்கு வந்து சேர்ந்துவிடுகிறேன். நீ மட்டும் நாளைக்கே புறப்பட்டுப் போ!"

"தனியாகப் போக எனக்கு மனம் வரவில்லை. நீங்களும் கூட வந்தால் ஒத்தாசையாக இருக்கும். இந்தப் பாழாய்ப் போன உத்தியோகத்திற்கு நாள், கிழமை எதுவும் கிடையாது. அப்படியானால்...... நீங்கள் கல்யாணத்தன்றைக்காவது வந்து விடுகிறீர்களா? அப்பா, அம்மாவுக்காகப் போகாவிட்டாலும் பிரேமாவுக்காகவாவது போய்த்தானே தீரவேண்டியிருக்கிறது? நான் போகாவிட்டால் அவளுடைய மனம் உடைந்துபோகும்......"

"அதற்காகத்தானே உன் அப்பா நம் ராஜாமணி செத்துப் போனபோதுகூட வந்து பார்க்காமலிருந்தார்?"

ரகுராமனுடைய வார்த்தைகள் ராதையின் மனத்தில் சுருக்கென்று தைத்தன. பதில் சொல்லக்கூட முடியாமல் அவள் திணறினாள். இருந்தபோதிலும் சமாளித்துக் கொண்டு, "ஆமாம், வேறு உங்களுக்கு என்ன வேலை? போனதைப் பற்றியெல்லாம் நினைத்துக்கொண்டே இருங்கள். பிரேமா நமக்கு என்ன செய்தாளாம்? அவளை உத்தேசித்தாவது நாம் போய்த்தான் ஆகவேண்டும்" என்றாள். இதைச் சொல்லி விட்டு அவள் மேலும் அங்கே நின்று கொண்டிருக்க முடியாமல் உள்ளே சென்று விட்டாள்.

ரகுராமன் நீண்ட பெருமூச்சு விட்டுக் கொண்டே மறுபடியும் நாற்காலியில் சாய்ந்தான். ராதையின் திடீர் மாற்றம் அவனுக்குப் பெரும் ஏமாற்றத்தை அளித்தது. தன்னுடைய ஒரே குழந்தை ராஜாமணி இறந்து விட்ட செய்தியை அறிவித்தும் ராதையின் தகப்பனார் வீட்டிலிருந்து ஒருவரும் வராததைக் கண்டு அவள் செய்து கொண்ட பிரதிக்ஞையை அதற்குள்ளாகவா மறந்து விட்டிருப்பாள்? அவளுடைய மனோபாவம் அவ்வளவு எளிதில் மாறிப் போய்விட்டிருப்பதை அறிந்ததும் அவனுக்குள் மிகுந்த கலக்கம் ஏற்பட்டது. அவளுடைய போக்கு அவனுக்கு வியப்பை அளித்தது. ஆனால் மறுகணமே அவன் மனத்தில் பச்சாத்தாபமும் முளை விட்டெழுந்தது. பாவம், கல்யாணமான பெண்களுக்குப் பிறந்தகம் எட்டாக் கனி மாதிரிதானே?

## 2

தன்னுடைய தகப்பனார் எப்படி இருப்பார் என்றே ரகுராமனுக்குத் தெரியாது. அவனுடைய தாயார் சீதாலக்ஷ்மி அம்மாள்

சிற்சில சமயங்களில் ஜன்னல் வழியாக நான் எதையாவது எறிந்தால் அவளுடைய மோதி ஒரே பாய்ச்சலாய்ப் பாய்ந்து அங்கே வந்து வட்டமிடும். அப்படி ஒரு சந்தர்ப்பத்தைச் சிருஷ்டி செய்து அதை ஒட்டி ஏதாவதொரு சாக்கு வைத்து மோதியின் எஜமானியைச் சந்தித்துப் பேசினாலென்ன என்று தோன்றிற்று. காற்று வாட்டம் அவர்கள் வீட்டிலிருந்து நமக்குக் குரல் கேட்கும். ஆனால் நாம் சொல்லுவது அங்கே கேட்காது என்பது தெரியும். இருந்தாலும் மோதியை நடுவில் வைத்துப் பேசுவது, அல்லது அதன் கழுத்துப் பட்டையில் ஒரு கடிதத்தைக் கட்டி 'மோதி விடு தூது' அனுப்புவது என்று நினைத்தேன். ஆனால் திடீரென்று என் யோசனை தூள் தூளாய்ச் சிதறிப் போயிற்று. 'மோதி! மோதி!' என்று அழைத்த இனிய குரல் என் செவிகளுள் விழுந்தது. அடாடா! அந்தக் குரலிலேதான் என்ன இனிமை! தேமதுரத் தமிழ் என்று பாரதியார் சொன்னதுகூட இந்த மாதிரியான குரலின் இனிமையிலிருந்துதான் சொல்லியிருக்க வேண்டும். என் தூதன் ஒரே பாய்ச்சலாய்க் குதித்து, நாக்கைத் தொங்கவிட்டுக் கொண்டு மூச்சுத் திணறத் திணற ஓடி அவளுடன் கொஞ்சத் தொடங்கினான். விடிந்து எழுந்ததும் முதல் முயற்சி படுதோல்வி!

அன்று சாயங்காலமும் எப்படியும் விளக்குகளை ஏற்ற வெளியே வருவாளென்பது தெரியும். ஜன்னலருகிலேயே பழி கிடந்தேன். அடாடா! என்ன அற்புதமான காட்சி! இள ரோஜா வர்ணமுள்ள சேலை. மருன் நிறமுள்ள சட்டை. நீண்ட பின்னல். தலையிலே ஒரு சண்பகப் பூக்கொத்து—இந்த அலங்காரங்களுடன் முன்றானை காற்றிலே பறக்க ஒரு கையிலே அகல் விளக்கை ஏந்தி மற்றொரு கையினால் அதை அணைத்தவளாய் அடிமேல் அடி வைத்து அன்னம் போல் நடந்து வந்து படிகளிலே வரிசையாய் வைத்துக் கொண்டிருந்தாள். 'அடாடா! நம்மிடம் ஒரு 'காமிரா' இருந்தால்...?' என்று அங்கலாய்த்தது என் மனம். அந்தக் காட்சியிலே மெய் மறந்து எவ்வளவு நேரந்தான் இருந்தேனோ தெரியாது.

கல்கத்தாவிலிருந்து அத்தை வந்திருக்கிறாள். ஒருவர் மாற்றி ஒருவர் ஓயாமல் என் படுக்கை அருகிலேயே உட்கார்ந்து கொண்டு தொணப்புகிறார்கள். அதனால் அதிகமாய் ஒன்றும் எழுத முடியவில்லை.

உன் பிரியமுள்ள
பானு.

"லஸ் கார்னர்"
மயிலாப்பூர், சென்னை

டேய், பானு!

வர வர உன் புத்தி இப்படி உலக்கைக் கொழுந்தாய்ப் போக வேண்டாம். சென்னைக்கு வந்ததும் வராததுமாய் நேரில் வசந்த விஹாருக்குப் போனேன். அப்பா ரொம்பவும் சர்வ சாதாரணமாய்ப் பேசிக் கொண்டிருந்தார். போய்க் கொஞ்ச நேரம் கழித்துத்தான் நீ ஊரில் இல்லை என்பது புரிந்தது. 'அதற்குள் நடமாடுகிறானா என்ன? கால் எப்படியிருக்கிறது?' என்றேன். 'காலா! காலில் என்ன வந்தது? அவனுக்கு ஒன்றும் இல்லையே!' என்றார் உன் அப்பா. எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. விஷமத்துக்கு எல்லையில்லையா? ஷீலா என்ன ஆனாள் பார்ப்போம் என்று முன் ஜாக்கிரதையுடன், 'பக்கத்துப் பங்களாவிலே குடி வந்திருக்கிற அகதிகள்......' என்று ஆரம்பித்தேன். உன் தம்பி 'கொடைக்கானலிலிருந்து வருகிறாயா? அல்லது பைத்தியக்கார ஆஸ்பத்திரியிலிருந்து வருகிறாயா?' என்று சகஜமாகக் கேட்டான். உன் தங்கைகள் இருவரும் எட்டி எட்டிப் பார்த்துச் சிரித்துக் கொண்டிருந்தார்கள். என்னைப் பற்றி அவர்களிடம் என்னத்தைச் சொல்லித் தொலைத்திருக்கிறாய்? அவர்கள் பதில் சொல்லாவிட்டாலும் நாமே விஷயத்தைத் தெரிந்து கொள்ளலாமென்று ஜன்னல் வழியாகப் பார்த்தேன். வழக்கம்போல் வைக்கோல் போரும், குச்சு வீடும்தான் இருந்தன. என் பாடு ரொம்பவும் தடுமாற்றமாகி விட்டது. எப்படியோ சமாளித்துக் கொண்டு உடனே புறப்பட்டு வீட்டிற்குப் போய் விட்டேன்.

உன் வரவை எதிர்நோக்கித் தடியும் கையுமாகக் காத்திருக்கும்,

ரகு.

* * *

திருவள்ளூர்

பிரிய ரகுவுக்கு,

கோபித்துக் கொள்ளாதே! உனக்கு உற்சாகமூட்டினால் உடம்பு குணமாகி விடுமென்று உன் அப்பா கூறினார். ஆகவே உனக்கு உற்சாகமாக இருக்கட்டுமென்று எழுதி வைத்தேன். போகட்டும், ஷீலாவை அழைத்துக் கொண்டு நான் ஓடி விட்டேனென்று நினைக்காமல் அந்த மட்டும் தடியுடன் காத்திருக்கிறாயே! சந்தோஷம்; நாளை நான் புறப்பட்டு வருகிறேன்.

இப்படிக்கு,
பானு

நாற்பத்தைந்து வயது மதிக்கக் கூடிய ஒருவர் இறங்கினார். மிகவும் உற்சாகமாகத் தடியைச் சுழற்றிக்கொண்டு தடதடவென்று படியேறி உள்ளே சென்றார்.

படபடவென்று ஷீலா எழுந்துபோவது தெரிந்தது. அதற்குள் ஜன்னல் திரை விழுந்துவிட்டது. அதற்குமேல் என்ன நடந்ததோ தெரியாது. இரவு நெடுநேரம் வரையில் தாழ்வாரத்து விளக்குகளும், மாடி விளக்குகளும் எரிந்துகொண்டே யிருந்தன. கிழவர் உரத்த குரலில் யாரையோ திட்டிக்கொண்டும் கூச்சலிட்டுக்கொண்டும் இருந்தார். மறுநாள் காலையிலிருந்து வீடு ஒரே நிசப்தம். கிழவரையும் காணவில்லை. ஷீலாவையும் காணவில்லை—சரி, அப்பா வரும் நேரமாகி விட்டது. பிறகு பின்.

உன் பிரியமுள்ள

பானு

***

"குறிஞ்சி"

கோடைக்கானல்

பிரியமுள்ள பானுவுக்கு,

உன் கடிதங்கள் என் ஆவலை அதிகரிக்கச் செய்கின்றன. அந்த நீலக் காரில் வந்த மனிதர் யார்? அவரைப்பற்றி ஏதாவது தகவல் தெரிந்து கொண்டாயா? ஒருவேளை அகதிகளின் முகாமிலிருந்து இவர் அழைத்து வந்து சங்கீதம் கற்பித்திருக்கிறாரோ? நான் நேரில் பார்த்திருந்தேனானால் உன்னைக் காட்டிலும் கொஞ்சம் அதிகமாய் விஷயங்களைக் கிரஹித்திருப்பேன். என்னை அடி மக்கு என்று எழுதினாய். நீதான் சர்வமுட்டாள்! வீட்டில் இரண்டு தங்கைகள், உனக்கோ ஹிந்தி தெரியும், வீடோ, பக்கத்து வீடு—இவ்வளவு வசதி யிருந்தும் உன்னால் இதற்குமேல் தெரிந்து கொள்ள முடியவில்லை என்றால் நம்ப முடியவில்லை. அவர் எங்கே போனார், என்ன விஷயம் என்பதைப் பற்றி அடுத்த கடிதத்தில் தெளிவாக எழுது.

உன் பிரியமுள்ள,

ரகு

***

"வஸந்த விஹார்"

மயிலாப்பூர், சென்னை

பிரியமுள்ள ரகுவுக்கு,

விஷயங்கள் இன்னும் வேடிக்கையாய்ப் போய்க் கொண்டிருக்கின்றன. காரிலே வருகிற மனிதர் யார் என்பதைக் கார் நம்பர் மூலம் கண்டுபிடிக்கப் பார்த்தேன். அது வெளியூருக்குப் போயிருக்கிற ஒரு ஜமீன்தாரின் கார். வந்த மனிதர் ஜமீன்தார் அல்ல; அது வரையில் நிச்சயம். ஆனால் அவர் யார் என்பது வேலைக்காரர்களுக்குத் தெரியவில்லை. ஷீலா அவரை நல்லமுகத்துடன் வரவேற்கவில்லை என்பது பிரத்யக்ஷமாய்த் தெரிகிறது. ஆனால் அந்த மனிதன் கிழவருடன் மணிக் கணக்காய்ப் பேசுகிறானாம். கிழவர் ஆசார உபசாரம் செய்கிறாராம். எங்கேயோ வெளியூருக்குப் போவதைப்பற்றிப் பேச்சு நடக்கிறதாம். இதெல்லாம் அந்தச் சமையற்காரன் சொன்ன செய்திகள். அன்று திடீரென்று எல்லோரும் போனது வேறெங்கு மில்லையாம். மஹாபலிபுரத்திற்கு உல்லாச யாத்திரை போனார்களாம். அவர்கள் தமிழ் நாட்டார்தான். அதிலும் அசல் தஞ்சாவூர் ஜில்லா பேர்வழிகள். 'பாசிப் பருப்பு', 'திறவுகோல்' 'ஆமானே' போன்ற முத்திரைகள் சமையற்காரன் பேச்சில் காணப்படுகிறது. ஷீலாவுடனும், அவள் தகப்பனாருடனும் பேசிப் பார்க்கும் பாக்கியம் எப்பொழுது கிடைக்குமோ தெரியாது. 'அந்த நாளும் வந்திடாதோ!' என்று பாடிக் கொண்டிருக்கிறேன். நேற்றிரவு மறுபடியும் ஏகக் கூச்சலும் அமர்க்களமுமாக இருந்தது. ஹிந்தி வேலைக்காரனுக்கும் கிழவருக்கும் தான் சண்டையா யிருக்க வேண்டுமென்று நினைத்தேன். கிழவரின் சித்தார் தூங்கிக் கொண்டிருக்கிறது. தோட்டத்தை ஒழுங்கு செய்வதிலும் வீட்டைக் கவனிப்பதிலும் இருவரும் மும்முரமாய் ஈடுபட்டிருக்கிறார்கள். யாரோ ஒரு விருந்தாளியை வரவேற்பதற்கான ஆயத்தமா யிருக்குமென்று நினைக்கிறேன். அது வந்த மஹானுபாவரோ? இன்று காலை முதல் ஷீலாவை எப்படியாவது ஒரு முறை பார்க்க வேண்டுமென்று துடித்துக் கொண்டிருக்கிறேன். அவன் பம்பரம்போல் சுழன்று வேலை செய்து கொண்டிருக்கிறான். விருந்தாளிகள் யாராக இருக்கலாமென்று மெதுவாய்ச் சமையற்காரனை அழைத்து விசாரித்தேன். நீலக் காரில் வருபவருடைய பிள்ளை ஷீலாவைப் பார்க்க வரப்போகிறானாம். இதுதான் விஷயம். சாயங்காலம் வந்த பிறகுதான் தெரியும். ஆனால் என் மனம் மட்டும் ஏனோ காரணமில்லாமல் குழம்பிக் கொண்டிருக்கிறது. கால் நன்றாகக் குணமாகி நடமாட எத்தனை நாட்கள் ஆகுமோ தெரியாது. ஏதாவது விபரீதம் நேர்ந்துவிடுமோ என்று நெஞ்சு திக், திக் கென்று அடித்துக் கொள்ளுகிறது.

வேறென்ன இருக்கிறது எழுத? இருந்தால் அடுத்த கடிதத்தில் பார்க்கலாம்.

உன் பிரியமுள்ள
பாலு

***

"குறிஞ்சி"
கொடைக்கானல் 'ஆப்ஸர்வேட்டரி'

பிரியமுள்ள பாலுவுக்கு,

விஷயங்கள் எப்படியோ சுற்றிச் சுழன்று கொண்டு போகிறது. பார்க்க வந்தவன் யார்? கிழவர் கூச்சலிடுவானேன்?—என்பதைப் பற்றி யெல்லாம் விவரமாய் எழுது. இங்கே மழை ஆரம்பித்து விட்டது. வெளியே போவதற்குக்கூட வசதியில்லை. பைன் மரங்களையும் யூக்லப்டஸ் மரங்களையும் எண்ணிக் கொண்டு காலம் கழிக்கிறேன். நீ எழுதியிருப்பதிலிருந்து அந்தப் பெண்ணுக்கு இஷ்டமில்லாத விவாகமாயிருக்குமோவென்று நினைக்கிறேன். இப்படிப்பட்ட நெருக்கடியான சமயங்களில் நம்மைப் போன்ற சீர்திருத்த நோக்கமுடைய மாணவர்கள் வலுவிலே புகுந்து ஏதாவது செய்யத்தான் வேண்டும். உனக்குக் கொஞ்சமாவது நடமாட முடிந்தால் கிழவரை ஏன் நீயே அறிமுகப்படுத்திக் கொள்ளக்கூடாது? அப்படி வலுவில் அறிமுகப் படுத்திக்கொண்டால்தான் விஷயத்தைக் கிரகித்துக்கொண்டு ஏதாவது உதவி செய்ய முடியும். முதலில் அந்த நீலக் கார் மனிதனே இந்தப் பெண்ணைக் கேட்க வந்திருக்கிறானோவென்று நினைத்தேன். நல்ல வேளை! அந்தமட்டும் பிள்ளை என்று எழுதியிருக்கிறாய். ஆனால் அவள் உற்சாகம் இல்லாமலிருப்பதற்குக் காரணம்தான் என்ன? எதற்கும் நாம் நேரில் சந்திப்பதற்குள் காரியம் ஒன்றும் குடி முழுகி விடாதென்று நினைக்கிறேன். அப்படி மிஞ்சிவிடும் போல் இருந்தால் உடனடியாக நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டியதுதான். என் உடம்பு முற்றிலும் குணமாகி விட்டது. அடுத்த ஞாயிற்றுக்கிழமைக்குள் நாங்கள் சென்னை வந்து சேருவோம். உன் தங்கைமார்கள் என்ன செய்கிறார்கள்? அவர்களைப் பற்றி ஒரு வார்த்தைகூட எழுதவில்லையே?

உன் பிரியமுள்ள
ரகு

***

"வசந்த விஹார்"
மயிலாப்பூர், சென்னை

பிரியமுள்ள ரகுவுக்கு,

பெண் பார்க்கும் படலம் நடைபெறவில்லை. எதிர்பாராத காரணத்தால் பிள்ளையாண்டான் வர முடியவில்லையாம். ரயில் பாதை சேர்பட்ட பிறகு வந்து பார்க்கட்டுமென்று அந்த நீலக் காரில் வந்த மனிதர் சொன்னாராம். பையன் இராணுவத்திலிருந்து திரும்பியவனாம். பிரம்மாண்டமான ஐயனார் கோவில் முன்னடியான்போல் இருப்பானாம். ஆளைச் சுற்றிலும் எப்பொழுதும் புகைமண்டலம் வட்டமிட்டுக் கொண்டிருக்குமாம். மொத்தத்தில் பையன் நல்லவனாம். இருந்தாலும் பெண்ணுக்கு இராணுவ உடுப்பைப் பார்த்தாலே 'இஸ்டீரியா' வந்துவிடுமாம். வேறு யாரையாவது மனதில் வைத்துக்கொண்டு இப்படிச் சொல்கிறானோ, என்னவோ? கிழவருக்கு ரொம்ப வருத்தம். சட்டுப் புட்டென்று காரியத்தை முடிக்க முடியாமல் இப்படித் தள்ளிக் கொண்டு போகிறதே என்று கவலைப்படுகிறாராம். கார்த்திகையன்று காலையிலிருந்து அந்தப் பங்களா கலகலவென்று காணப்படுகிறது. சில நாட்கள் ஒரே சோக நாடகம். சில நாட்கள் ஒரே கலகலப்பு. என்ன விசித்திர மனிதர்களோ தெரியவில்லை. நான், விஷயத்தை இப்படியே வளர விட்டுக்கொண்டு போகவிடக்கூடாது, சீக்கிரம் துணிந்து ஏதாவது செய்துவிட வேண்டுமென்று முடிவு கட்டியிருக்கிறேன்.



முதல் குற்றவாளி:—நான் நான் ஒரு பாங்கியில் களவாடினேன் என்று அகப்பட்டுக் கொண்டேன்; நீங்கள் என்ன குற்றம் செய்தீர்கள்?

இரண்டாவது குற்றவாளி:—நான்தான் அந்த பாங்கியின் காஷியர்!



வரையில் எங்கேயும் ஒலித்துக் கொண்டிருப்பது போலவே எனக்குத் தோன்றும்.

சில சமயங்களில் இவ்வளவு அழகாய் நம் பக்கத்தில் ஒருவருமே வாசிப்பதில்லை என்று என் அம்மா புகழுவாள். ஆனால் கடந்த இரண்டு மூன்று நாட்களாகக் கிழவரின் வாசிப்பில் வழக்கம்போல் விறுவிறுப்பில்லை. ஷீலாவின் குரலொலி கேட்கக் காணோம். என்ன காரணமாக இருக்குமோ தெரியவில்லை. உடம்பு சுகமாயிருந்திருக்காது என்று நினைத்தேன். ஆனால் மறுநாள் காலையில் அவள் கிட்டிங் ஊசியும் கையுமாய்ப் பெஞ்சியில் உட்கார்ந்திருப்பதைக் கண்ட பொழுதுதான் சற்று மன அமைதி ஏற்பட்டது. ஸிந்தி வேலைக்காரன் சொன்னதிலிருந்து தகப்பனுக்கும், பெண்ணுக்கும் ஏதோ மனக்கசப்பு ஏற்பட்டிருக்கலாமென்று தோன்றுகிறது. ஒருவேளை இந்த மனுஷன் சொந்தத் தகப்பனாரோ இல்லையோ என்று சந்தேகமும் கூடவே எழுந்தது. ஜன்னல் கதவைக் கொஞ்சமாக ஒருக்களித்துக் கொண்டு 'பைனாகுல'ரை எடுத்துப் பார்த்தேன். கிழவர் கூடத்திலுள்ள சோபாவில் படுத்துப் புகை பிடித்த வண்ணம் ஏதோ யோசனையில் ஆழ்ந்திருப்பவர்போல் காணப்பட்டார். அவள் முகத்தைப் பார்க்கும் பொழுது எனக்குச் சற்றே கூச்சம் உண்டாயிற்று. வழக்கத்திற்கு மாறாக அவள் முகம் சோர்ந்து வாடிக் காணப்பட்டது. கண்களில் தண்ணீர் ததும்பி நின்றது. பின்னல் வேலை செய்வதைப்போல் நடித்துக்கொண்டிருந்தாளே ஒழிய ஒருவரிகூடப் பின்னவில்லை. கைகள் அசைவற்றிருந்தன. நான் பார்க்கத் தொடங்கி சில நிமிஷங்களுக்கெல்லாம் சுற்றுமுற்றும் பார்த்துவிட்டுக் கண்களை ஒருமுறை துடைத்துக் கொண்டாள். சிறிது நேரம் கழித்து முன்பு நான் குறிப்பிட்டிருந்த அதே நீல நிறக் கார் வந்து நின்றது. அதிலிருந்து சுமார் நாற்பது



சிஷ்யனாகக் கூட ஆகிவிடுவாயோ என்னவோ? கடிதத்தைப் படித்தது முதல் உன் உள்ளம் கவர் ஷீலாவை நானும் பார்த்துவிட வேண்டுமென்று ஆவலுண்டாகிறது. ஆனால் நான் எப்படி வர முடியும்? குறைந்தது இன்னும் இரண்டு மாதங்களாவது இங்கு இருந்தாக வேண்டும். சீக்கிரம் வருவதற்கு ஏதாவதொரு சந்தர்ப்பம் நேராதா என்று யோசித்துக் கொண்டிருக்கிறேன். ஒரு முக்கியமான விஷயம். நீ 'பைனகுல'ரின் மூலம் பார்ப்பது உன் தங்கைகளுக்குத் தெரிந்தாலும் சரி, அல்லது அந்த ஷீலாவுக்குத் தெரிந்தாலும் சரி, உன்னைப் பற்றி என்ன நினைப்பார்கள்? நானாக இருந்தால் என் தங்கைகளை அனுப்பி அவளைப் பற்றிய விஷயங்களைத் தெரிந்து கொண்டு, பிறகு கனவு காணத் தொடங்கி யிருப்பேன். இன்னும் கேட்கப் போனால் உன்மேல் அந்த ஆரணங்குக்கு அனுதாபம் உண்டாகும்படி விஷயத்தைச் சொல்லி எப்படியாவது ஒரு நாள் வந்து பார்க்கும்படி செய்திருப்பேன். அவள் அகதி என்று நீ அனுதாபப் படலாம். நீ கிரிக்கெட் மோகத்தால் காலை உடைத்துக் கொண்டாயே என்று அவள் அனுதாபப் படலாம். பரஸ்பர அனுதாபங்கள் அனுதாபக் காதலாக மாறலாம்.

அம்மாவின் கொத்துச் சாவி ஓசையும் மெட்டி ஓசையும் கேட்கிறது. நான் விளக்கை அணைக்கா விட்டால் மெயின் 'ஆப்' ஆகிவிடும். மற்றவை அடுத்த கடிதத்தில்.

இப்படிக்கு,
உன் பிரியமுள்ள
ரகு

***

"வசந்த விஹார்"
மயிலாப்பூர்

பிரியமுள்ள ரகுவுக்கு,

டேய், மக்கு! அடி மக்கு! நான் ஒன்று எழுதினால் நீ ஒன்றை நினைத்துக்கொண்டு எழுதி யிருக்கிறாயே! நான் எழுதியது அவர்கள் வந்தவுடன் எழுதியது. கடந்த ஒரு வாரமாக என்ன நடைபெறுகிறது என்பதை எழுதுவதற்குள் உனக்கென்ன அவசரம்? வந்த புதிதில் தினம் இரவு சாப்பாடு முடிந்ததும் சித்தார் ஓசை ஆரம்பமாகும். கிழவர் அருமையாய்ச் சித்தார் வாசிப்பார். கூடவே ஷீலாவின் குரல் கேட்கும். என் மாமா கூட ரஸிக்க ஆரம்பித்து விட்டாரென்றால் பார்த்துக் கொள்ளேன். ஏதேதோ தும்ரி யால், தில்லானு எல்லாம் பிரமாதப்படும். எனக்கு அவைகளெல்லாம் புரியாது. மால்கோஷ், பீம்ப்ளாஸ் போன்ற இரண்டு மெட்டுக்களை அவள் பாடுவாள். அவ்வளவுதான்; மெய் மறந்து போய்விடுவேன். அவர்கள் உட்கார்ந்திருக்கும் இடமும் பாடுவதும் கண்ணுக்கு எட்டாது. நானே கற்பனை உலகில் ஷீலாவையும் சித்தாரையும் உருவகப் படுத்திக் கொள்வேன். இன்னிசை விருந்து இவ்வளவு நேரந்தான் நடைபெறுமென்று சொல்ல முடியாது. ஒரே தேவகானமாய்ப் பொழிந்து தள்ளி விடுவாள். நான் மெய் மறந்து அதிலேயே ஈடுபட்டு விடுவேன். ஒவ்வொரு நாளும் முடிக்கும் பொழுது 'ஜனகணமன' பாடாமல் முடிப்பதில்லை. சங்கீதம் நின்று வெகு நேரம்

# அடுத்த வீட்டு அகதி

குகப்ரியை

"வசந்த விஹார்"
மயிலாப்பூர், சென்னை

பிரியமுள்ள சருவுக்கு,

நீ கோடைக்கானலுக்குப் போனதை நினைக்க எனக்கு ரொம்பவும் வருத்தமாயிருக்கிறது. உன் உடல் நலத்தை உத்தேசித்துத்தான் போயிருக்கிறாய் என்றாலும் நீ இல்லாமல் பொழுது போவது ரொம்பக் கஷ்டமாயிருக்கிறது. நானும் உன்னுடன் வரவேண்டுமென்றுதான் ஆசைப்பட்டேன். பைன் காடுகள், குறிஞ்சி ஆண்டவன் கோயில் எல்லாவற்றையும் பார்க்க வேண்டுமென்றும் உல்லாசமாய்ப் படகு தள்ளி விளையாடலாமென்றும் ரொம்பவும் ஆவலாயிருந்தேன். அப்பா அனுமதிக்கவில்லை. நேற்று 'கிரிக்கெட்' விளையாடும்போது எதிர்பாராத விதமாய்க் காலில் அடி பட்டுக் கணுக்கால் எலும்பு நழுவிவிட்டது. ஒருவேளை உடைந்திருக்கலாமோ என்று சந்தேகப்படுகிறார் டாக்டர். படுத்த படுக்கையில்தான் இருக்கிறேன். உனக்கு ஒருவிதமான தொல்லையென்றால் என் பாடு 'மத்தளத்துக்கு இருபுறமும் இடி' என்ற கதைதான். அங்கே வீசும் காற்று உன் உடம்புக்கு ஏற்றது என்று உன் அப்பா சொன்னார். எப்படியாவது உடம்பு குணமானால் சரி.

இங்கே நம் பக்கத்துப் பங்களாவில் ஒரு பெரியவர் குடி வந்திருக்கிறார். நீ இங்கே இல்லாமற் போய் விட்டாயே! அவர்கள் லாகூரிலிருந்து ஓடிவந்த அகதிகளாம். ஒரு காலத்தில் மிகவும் உயர்வாய் வாழ்ந்தவர்கள் போல் தோன்றுகிறது. ஒரு கிழவர், பதினேழு பதினெட்டு வயதுள்ள ஒரு பெண், ஹிந்தி பேசும் ஒரு வேலைக்காரன், தமிழ் நாட்டுச் சமையற்காரப் பையனொருவன், வெள்ளை வெளேரென்ற குச்சு நாய் ஒன்று—இவர்கள்தான் அந்தக் குடும்பத்தின் அங்கத்தினர்கள். அந்தக் குச்சு நாயின் பெயர் மோதி. தமிழ் நாட்டுக் குடும்பம். கிழவருக்கு வயது அறுபது இருக்கலாம். நல்ல நீண்ட மூக்கு. சந்திர வளையம்போல் பின் தலையிலே வெண்மையான முடி ஒட்டிக் கொண்டிருக்கிறது. நல்ல ஆஜானுபாகு. முகத்தில் நல்ல தேஜஸ். சிவந்த நிறம். பொதுவாகப் பார்ப்பவர்கள் கௌரவிக்கத் தகுந்த தோற்றம். பெண், அவருடைய பெண்ணாகவோ பேத்தியாகவோ இருக்கலாம். சாயலில் அதிக ஒற்றுமையில்லை. ஆனால் கடைந்தெடுத்த தந்தப் பதுமையைப் போல் இருக்கிறாள். சற்றே நீண்ட முகம், கூர்மையான மூக்கு. முகத்திற்குச் சற்றுச் சிறியதாய்த் தோன்றும் கண்கள். அகன்ற நெற்றி. கறுத்து அடர்ந்த புருவங்கள். அழகிய மாம்பழக் கன்னங்கள். மெல்லிய கோவை இதழ்கள். இவைகளையெல்லாம் சேர்த்து ஒரு உருவம் கொடுத்தால் அதுதான் ஷீலா. அவளது சொந்தப் பெயர் சுசீலாவாம். ஆனால் கிழவர் எந்த மூலையிலிருந்தாவது 'ஷீலா, ஷீலா' என்றுதான் நொடிக்கு நூறு முறையாவது கூச்சலிடுவார். 'கிரிக்கெட் மாட்ச்'க்காக 'போண்டா' விடமிருந்து வாங்கின 'பைனாகுலர்' இந்தச் சமயத்தில் ரொம்ப உதவியாயிருக்கிறது. காலில் கட்டுப் போட்டிருக்கிறார்கள். ஓயாமல் ஊர் சுற்றிக் கொண்டிருந்த எனக்கு இப்படி இருபத்துநாலு மணிநேரமும் படுக்கையிலேயே இருப்பது ரொம்பவும் சிரமமாக இருக்கிறது. நீ அங்கே எப்படிக் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறாயோ என்று சதா உன்னைப்பற்றித்தான் நினைத்துக் கொண்டிருக்கிறேன். என்னுடைய தனிமையைப் பார்த்துக் கருணை கூர்ந்துதான் பகவானே இந்த அகதிகளை அடுத்த வீட்டிற்குக் கொண்டு வந்து விட்டிருக்கிறாரோ என்றுகூடத் தோன்றுகிறது. பரம நாஸ்திகனான எனக்குப் பகவான் எங்கிருந்து முளைத்தாரென்று நீ நினைப்பாய். பக்தனைச் சோதனை செய்யும் சமயத்தில் பகவான் கட்டாயம் வந்துதானாக வேண்டும். வேறு வழி?

காலையில் மணி பத்து அடித்ததும் எனக்குச் சாப்பாடு வரும். நான் சாப்பிட்டு விட்டுக் கை கழுவும்போது நேர் எதிரிலுள்ள ஹாலில் அப்பாவும் மகளும் கையில் பத்திரிகையை வைத்துக்கொண்டு பிரமாதமான அரசியல் விமர்சனத்தில் ஈடுபட்டிருப்பார்கள். ஒரு வார்த்தைகூடக் காதில் விழாவிட்டாலும் அந்தக் காட்சி கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும். மணி பன்னிரண்டு அடிக்கும் வரையில் அந்தப் பெண் அங்கும் இங்கும் தோன்றித் தோன்றி மறைந்து கொண்டிருப்பாள். பன்னிரண்டு அடிப்பதற்குச் சில நிமிஷங்களுக்கு முன்னமேயே பெரியவரது அபூர்வமான குறட்டை

வீட்டிலிருந்து எதிரொலிக்க ஆரம்பிக்கும். அழகான 'உல்லன்' நூல் பந்தும் பாதி பின்னல் வேலை செய்யப்பட்ட சட்டையும் கையுமாய் லீலா எதிர்ப்புறத்து ஜன்னலையடுத்த பெஞ்சியில் உட்கார்ந்து பின்னல் வேலை செய்து கொண்டிருப்பாள். எங்கே நான் பார்ப்பதைக் கவனித்து விடுவாளோ என்று பயந்து நான் தூரதர்சினியைக் கீழே வைத்துவிட்டு வெறும் கண்களாலேயே பார்க்க ஆரம்பிப்பேன். தனக்குத்தானே அவன் ஏதோ முணுமுணுப்பான். ஆனால் அது என்ன விஷயம் என்று விளங்காது. இரண்டொரு நாளாக வேலைக்காரர்கள் அந்த ஜன்னலண்டை வரும்பொழுது கூப்பிட்டுப் பேசினேன். எனக்குத் தெரிந்த அரை ஹிந்தியில் அவனைக் குசலம் விசாரித்தேன். ஒன்றும் பிரயோஜனமில்லை. என்னுடைய ஹிந்தி அவனுக்குப் புரியவில்லை; அவனுடைய ஹிந்தி எனக்குப் புரியவில்லை. சமையற்காரப் பையனைப் பார்க்க வேணுமென்ற ஆவல். ஆனால் அவனைச் சந்திப்பது அவ்வளவு சுலபமாக இல்லை.

சாயங்காலம் மணி நாலடிக்க வேண்டியது தான்; லீலா அழகான சேலை உடுத்திக் கொண்டு இங்கும் அங்கும் போவாள். தந்தையும் மகளும் வெளியே செல்லத் தயாராகி விடுவார்கள். நீல நிறமுடைய ஒரு கார் வரும். இருவரும் புறப்படுவார்கள். மாடிப் படியிலிருந்து அவள் இறங்கி வரும் பொழுது எங்கேயோ வானத்திலிருந்து அப்ஸரஸ் இறங்கி வருவதுபோல் தோன்றும். வந்த புதிதில் எல்லாரும் குடுத்தாவமாய்க் காட்சி யளித்த அவள் தமிழ் நாட்டுக் கட்டழகியாய் 'அணங்கு கொல், ஆய்மயில் கொல்' என்று வியக்கும்படி இறங்கி வருவாள். ஏதடா, பிள்ளையாண்டான் இப்படி எழுதுகிறானே என்று பயப்படாதே! நேற்றுத் திருட்டுத்தனமாய் 'பைனாகுல'ரின் உதவியால் கார் நம்பரைக் குறித்துக் கொண்டேன். இனிமேல் விஷயங்கள் சுலபமாய்ப் புரிந்து விடும். சமையற்காரப் பையனை ஒரு நிமிஷம் பார்த்து விட்டேனானால் எல்லாவற்றையும் விவரமாய் எழுதி விடுவேன். மற்றவை அடுத்த கடிதத்தில்.

இப்படிக்கு,
உன் பிரியமுள்ள

பானு

பின் குறிப்பு:—அப்பா, சரு! தயவு செய்து இந்தக் கடிதத்தை உன் தாயார் கைக்கு அகப்படும்படி எந்தப் புத்தகத்திற் குள்ளேயாவது வைத்து விடாதே! என் மானம் பறி போகிறது!

—பானு.

* * *

"குறிஞ்சி"
கோடைக்கானல்

பிரியமுள்ள பானுவுக்கு,

உன் கடிதம் கிடைத்தது. இங்கேயுள்ள இயற்கைக் காட்சிகளையெல்லாம் பார்க்கும்போது உன்னால் வர முடியாமல் போய்விட்டதே என்று வருத்தமாயிருக்கிறது. படகில் போவது நீங்கலாக மற்ற எல்லா இடங்களுக்கும் போகலாமென்பது அம்மாவின் உத்தரவு. உன்னுடைய காதல் கடிதத்தைப் படித்ததிலிருந்து எனக்குச் சீக்கிரம் சென்னைக்கு வரவேண்டும் என்று தோன்றுகிறது. காருலாவும் டிராமுலாவும் மயிலையில், மாடிப்படியில் உன் கண் முன்னே நிற்பவள் யாரோ? அவள் யாரோ? உன்னுடைய கடிதத்திலிருந்து, 'காதலினால் மானுடர்க்குக் கவிதை யுண்டாம், கானமுண்டாம், சிற்பமுண்டாம்' என்று பாரதியார் பாடியது உனக்காகத்தான் பாடினாரோ என்றுகூடத் தோன்றிவிட்டது. ஏது! நீ பெரிய கதா



மோட்டார்காரில் உட்கார்ந்திருப்பவர் (டிரைவரிடம்):—பின்னால் கார் வருகிறது, ஜாக்கிரதை!

டிரைவர்:—கவலைப்பட வேண்டாம்! நான் பின்னால் வருபவை மீது இது வரையிலும் காரை ஏற்றியதில்லை!

# படித்துப் பார்!

## MADRAS

சென்ற ஜனவரி 26-ம் தேதிக் குடியரசு விழாவை யொட்டி சென்னை சர்க்கார் விளம்பர இலாகா ஒரு அருமையான மலரை வெளியிட்டிருக்கிறது. கவர்ச்சியான முகப்புப் படத்துடன் வெளியாகி யிருக்கும் இம் மலரைப் பிரித்ததும், பாரத நாட்டுக்கு விடுதலை தேடித்தந்த நம் அருமைத் தலைவர் காந்தி மகாத்மா புன்னகை பொலிய விளங்கும் காட்சி நம் கண்ணையும் கருத்தையும் ஒருங்கே கவருகிறது. பிரதம மந்திரி ஸ்ரீ குமாரசுவாமி ராஜா குடியரசைப் பற்றி எழுதியிருக்கும் கட்டுரையில் மக்களின் கடமை என்னவென்பதை விளக்கியுள்ளார். மாகாணத்தின் நிதி நிலைமை, உணவு உற்பத்தி, நீர்ப்பாசன அபிவிருத்தி, நீதி - நிர்வாகப் பிரிவினை, ஹரிஜன முன்னேற்றம், ஜமீன் ஒழிப்பு, சுகாதாரம், கிராமப் புனருத்தாரணம், பெண்கள் முன்னேற்றம், கலை வளர்ச்சி, கல்வி, போக்குவரத்து, மதுவிலக்கு முதலிய துறைகளில் சென்னை மாகாண அரசாங்கம் பதவி ஏற்றதிலிருந்து இதுவரை என்னென்ன சாதித்திருக்கிறது என்பதைப் படங்களாலும் கட்டுரைகளாலும் விளக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு கட்டுரையும் படிப்பதற்கு ரசமாக அமைந்திருக்கிறது. This is Madras என்ற கட்டுரையில் சென்னை மாகாணத்தைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டிய பல முக்கிய விஷயங்கள் சுருக்கமாகவும் அழகாகவும் தொகுத்துக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. பக்கத்துக்குப் பக்கம் புகைப் படங்களும் சித்திரங்களும் தலைவர்கள் உருவப் படங்களும் இம் மலருக்கு அழகுக்கு அழகு செய்கின்றன. சுருங்கச் சொன்னால், இது ஒரு சர்க்கார் பிரசுரம் மாதிரியாகவே தோன்றவில்லை. பிரபல பத்திரிகைகள் பிரசுரிக்கும் கலைச் சிறப்பு வாய்ந்த விசேஷ மலர்களைப்போல் விளங்குகிறது. விலை ரூபாய் ஒன்றேதான். விலாசம்: The Director of information and Publicity, Madras.



## குஜராத்தி மண்டல் வெள்ளிவிழா மலர்

தேசாபிமானத்துக்கும் வர்த்தகத் திறமைக்கும் புகழ் பெற்றவர்கள் குஜராத்திகள். இந்தியாவில் அவர்கள் இல்லாத இடமே கிடையாது என்று சொல்லலாம். எங்கே போனாலும் வர்த்தகத்துக்கு அடுத்தபடியாகப் பொது வாழ்க்கையில் தீவிரமாகப் பங்கு எடுத்துக் கொள்வது அவர்கள் வழக்கம். இருபத்தைந்து வருஷங்களுக்கு முன் அவர்கள் சென்னையில் குஜராத்தி மண்டல் என்ற பெயரில் ஒரு சங்கத்தை ஸ்தாபித்தார்கள். மேற்படி மண்டலின் வெள்ளி விழாக் கொண்டாட்டம் சென்ற மாதம் 26 ம் தேதி சென்னை கவர்னர் ஸ்ரீ பவ்நகர் மகாராஜாவின் தலைமையில் வெகு சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. அப்போது மேற்படி விழா ஞாபகார்த்தமாக ஒரு மலரும் வெளியிடப்பட்டது. கவர்ச்சியாகவும் அழகாகவும் வெளிவந்திருக்கும் இம்மலரில் ராஜாஜி, மௌலானா ஆசாத், ஸ்ரீ தக்கர் பாபா, சென்னை மாகாணப் பிரதம மந்திரி ஸ்ரீ குமாரஸ்வாமி ராஜா முதலிய பல பிரமுகர்கள் மேற்படி மண்டலுக்குப் பல்லாண்டு கூறி யிருக்கிறார்கள். சென்னை மாகாணத்தொழில் வளர்ச்சிக்காக குஜராத்தி மக்கள் செய்திருக்கும் தொண்டைப் பற்றிய கட்டுரை, ஜவுளி உற்பத்தியைப் பற்றிய கட்டுரை, தற்கால இந்திய பாங்கித் தொழிலைப் பற்றிய கட்டுரை—இவை மிக நன்றா யிருக்கின்றன. காந்திஜி, ராஜாஜி, நேருஜி, படேல் ஆகிய நால்வருடைய திருவுருவப் படங்களைப் பெரிய அளவில் ஆர்ட் கடிதாசியில் அழகாக வெளியிட்டிருப்பது மலரின் சிறப்பை அதிகமாக்குகிறது. விலாசம்: குஜராத்தி மண்டல், 170, நேதாஜி சுபாஷ் சந்திர போஸ் ரோடு, சென்னை.

கோட்டை கட்டிக் கொண்டு வந்திருந்தான். ஆனால் அங்கு வந்ததும் அவனுக்கு அவ்வளவும் மறந்துபோய் விட்டது. பிறகு அவன் மிகவும் துணிச்சலை வரவழைத்துக் கொண்டு, "என்ன, நீ செய்த முடிவு சரியான முடிவுதானா?" என்று கேட்டான்.

குற்றவாளியைப் போலச் சித்திரலேகா தலை குனிந்தாள். அவளுடைய கண்களிலிருந்து இரு சொட்டுக் கண்ணீர் கீழே உதிர்ந்தது. அவள் மிகவும் மெதுவான குரலில், "ஸ்வாமி! தாங்கள் இப்பொழுது கண்ணால் பார்த்துக் கொண்டிருக்கிறீர்களே, இதுதான் என்னுடைய கடைசியான தீர்மானமான முடிவாகும்!" என்றாள்.

"ஆனால் இந்த முடிவைப் பற்றி மறுபடியும் நீ ஆலோசித்து மாற்றிக்கொள்ள உனக்குப் பரிபூரணமான உரிமை இருக்கிறது. ஆமாம், அது போகட்டும். இந்த முடிவுக்கு வருவதற்கு முன்பாக என்னை நீ ஒரு வார்த்தை கலந்து கொண்டிருக்க வேண்டாமா? உனக்கும் எனக்கும் யாதொரு விதமான தொடர்பும் கிடையாது என்றே நீ தீர்மானித்து விட்டாயா? உன் மனதிலே தோன்றிய விஷயத்தை என்னிடம் சொல்லி ஆலோசனை கேட்க வேண்டிய அவசியமே உனக்குத் தோன்றவில்லையே, அது ஏன்? சித்திரலேகா! காதலுக்கு வித்தியாச உணர்ச்சியே கிடையாது. இரு உள்ளங்கள் ஒன்று படுவதன் அறிகுறியைத்தான் நாம் காதல் என்கிறோம். 'நாம் இப்படி முடிவு செய்து விட்டால், இவன் அப்புறம் யாரையாவது கல்யாணம் செய்து கொள்ளாமல் எங்கே போகப் போகிறான்?' என்று ஒருவேளை நீ எண்ணியிருக்கலாம். நீ நினைப்பது முற்றிலும் தவறு. உன் எண்ணம் ஈடேறாது. உன்னுடைய இந்த முடிவின் மூலம் நீ என்னை இன்புறச் செய்ய முடியாது; முடியவே முடியாது. நான் சொல்லுவதை நம்பு. நான் என் வாழ்க்கையில் உன் ஒருத்தியை மட்டும்தான் காதலித்திருக்கிறேன். இனிமேல் உன்னைத் தவிர என்னால் வேறொருத்தியை மனதினால் நினைக்கவும் முடியாது; காதலிக்கவும் முடியாது. ஆகவே நான் மணம் செய்து கொள்வது என்பது நடக்கவே நடக்காத காரியம்" என்றான் பீஜகுப்தன்.

அதைக் கேட்டதுதான் தாமதம், பீஜகுப்தனுடைய பாதங்களில் சித்திரலேகா விழுந்தாள்.

(தொடரும்)

## ★ ★ ★ ★ கவிகளுக்குப் பாராட்டு ★ ★ ★ ★

● நிகழும் வருஷத்தில் வட மொழிக்கும் வட மொழிப் புலவர்களுக்கும் யோகம் பிறந்திருக்கிறது. கல்வி மந்திரி கனம் மாதவமேனன் தலைமையில் சம்ஸ்க்ருத சமாஜத்தார் கும்பகோணம் அரசாங்கக் கல்லூரியில் "சர்வ கவிகள் தின"த்தைச் சிறப்பாகக் கொண்டாடினார்கள். வட மொழியின் ஆதி கவிகளான வால்மீகி, வியாசர், போஜன், பாணன், காளிதாஸன், பவபூதி முதலிய மகா கவிகளுக்குப் பல புலவர்கள் சொற்பொழிவினால் அஞ்சலி செய்தார்கள். பொன் குடத்துக்குப் பொட்டு இட்டதுபோல் ஓர் உத்தமமான காரியத்தையும் அன்றைய தினம் சமாஜத்தார் செய்தார்கள். கும்பகோணம் அரசாங்கக் கல்லூரியில் பதினாறு வருஷ காலம் சம்ஸ்கிருத பண்டிதராக இருந்து அரும் தொண்டாற்றிய காலஞ்சென்ற மஹாமஹோபாத்யாய, பண்டித ராஜ, அபிநவ பட்ட பாண, சப்த தர்க்காலங்கார - வித்யாபூஷண வித்வத் கவி ஸ்ரீ ஆர். வி. கிருஷ்ணமாச்சாரியார் அவர்களின் உருவப் படத்தை கனம் மாதவமேனன் திறந்து வைத்தார்.



மேற்படி விழாவுக்கு, காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு சங்கராச்சாரியார், ஆந்திர கவி சாமக்கல் கவிஞர், சென்னைக் கவர்னர், பீஹார் கவர்னர், அஸ்ஸாம் கவர்னர், மாஸ்கோவில் இந்தியத் தூதராக இருக்கும் டாக்டர் ராதாகிருஷ்ணன் முதலிய பிரபல பிரமுகர்கள் வாழ்த்துச் செய்தி அனுப்பியிருந்தார்கள்.



மேற்கு மாம்பலம் ஸ்ரீ சாரதா உயர்தர ஆரம்பப் பாடசாலை நிர்வாகிகள் சென்ற 30-1-50 ம் தேதி காந்திஜி அமரரான அன்றையதினம் விசேஷப் பிரார்த்தனைக் கூட்டம் நடத்தி மகாத்மாஜி ஸ்தூபி நிதிக்காக ரூ. 101 அளித்தார்கள்.

---

நடக்கக் கூடாத காரியம். அவன் ஒரே ஒரு பெண்ணைத்தான் காதலித்தான். அவள் வேறு யாரும் இல்லை; அவள்தான் சித்திரலேகா. ஆகவே காதலுக்கும் கல்யாணத்துக்கும் நெருங்கிய தொடர்பு இருக்கத்தான் செய்கிறது என்பது இதிலிருந்து விளங்கவில்லையா?

பீஜகுப்தனுக்குத் தூக்கமே பிடிக்கவில்லை. அவன் புரண்டு புரண்டு படுத்தான். கடைசியில் படுக்கையில் இருப்புக் கொள்ளாமற் போகவே, அவன் எழுந்தான். அப்பொழுது பாதி ராத்திரிக்குமேல் ஆகியிருந்தது. அவன் மாளிகைக்கு வெளியே வந்தான். பிறகு அங்கிருந்து கிளம்பிக் கால்நடையாகவே குமாரகிரியின் குடிசையை நோக்கி நடந்தான்.

குமாரகிரியின் குடிசையில் பிரகாசமாக இருந்தது. குமாரகிரி தன் ஆசனத்தில் அமர்ந்து தியானத்தில் லயித்திருந்தான். சித்திரலேகா ஒரு மூலையில் தர்ப்பாசனம் ஒன்றில் படுத்து உறங்கிக் கொண்டிருந்தாள். மிக மிகப் பகட்டான கண்களைப் பறிக்கும் ஆடையலங்காரங்கள் அணிந்திருந்த காலங்களில்தான் சித்திரலேகாவை பீஜகுப்தன் பார்த்திருந்தான். அமைதியே உருவெடுத்த அடக்கமான படாடோபமற்ற ஆடை யுடுத்திய சித்திரலேகாவை அவன் அதுகாறும் கண்டதே இல்லை. அன்றுதான் முதல் தடவையாக அவன் அந்த ராணியை அந்தமாதிரியான எளிய உடையில் கண்டான். அவளுடைய முகத்தில் அரும்பிய முல்லையைப்போல் அமைதி இளநகை ஆடிக் கொண்டிருந்தது. சித்திரலேகாவின் தலைமாட்டில் போய் உட்கார்ந்த பீஜகுப்தன் வைத்த கண் வாங்காமல் அவளையே உற்றுப் பார்க்கலானான்.

பொழுது விடிந்தது. குமாரகிரி சமாதி கலைந்து எழுந்தான். சித்திரலேகாவும் கண்களைத் திறந்தாள். இருவரும் ஏக காலத்தில் பீஜகுப்தனைப் பார்த்தனர். "அட! பீஜகுப்தனா?" என்று இருவரும் சேர்ந்தாற்போல் கேட்டனர்.

குமாரகிரியின் வதனத்திலே வியப்புத் தாண்டவமாடியது. சித்திரலேகாவின் வதனத்திலே அச்சம் தாண்டவமாடியது.

பீஜகுப்தன் எழுந்து குமாரகிரியை வணங்கினான். பிறகு சித்திரலேகாவுக்கும் தன் வணக்கத்தைத் தெரிவித்தான். குமாரகிரி அவனுக்கு ஆசீர்வாதம் செய்தான். ஆனால் சித்திரலேகா தன் இரு கண்களையும் மூடிக் கொண்டாள்.

பீஜகுப்தன் மெதுவான குரலில், "சித்திரலேகா!" என்று மிகவும் அன்பு தோய்ந்த குரலில் அழைத்தான்.

"ஏன், ஸ்வாமி!" என்று மிகவும் பவ்யமாகக் கேட்டாள் சித்திரலேகா.

பீஜகுப்தன் என்ன [illegible] சொல்ல வேண்டும் என்று வழி [illegible] மனக்

கொண்டே ஆகவேண்டும். என் வேண்டுகோளைத் தட்டக் கூடாது. நான் ஒருத்தி இருக்கும்பொழுது தாங்கள் மணம் செய்து கொள்ளச் சம்மதிக்க மாட்டீர்கள் என்பதை நான் நன்றாக அறிவேன். ஆகவேதான் தங்களைப் பிரிந்து போகும்படியான நிர்ப்பந்தம் எனக்கு ஏற்பட்டது. என்னை மறந்து விடுங்கள். நானோ ஒரு விதவை. ஆசை வசப்பட்டுக் கடமை தவறி நடக்க முற்பட்டு விட்டேன். இன்னுமொரு தடவை நான் என் கடமைகளைச் சரிவர அநுஷ்டிக்கப் பாடுபடப் போகிறேன். ஆகவே புலனடக்கத்துடன் கூடிய வைதவ்ய வாழ்க்கையை மீண்டும் ஒரு முறை மேற்கொள்வதென்று முடிவு செய்திருக்கிறேன்.

தங்கள்
சித்திரலேகா.

பீஜகுப்தன் கடிதத்தைப் படித்தான். படிக்கப் படிக்க அவனுடைய கைகள் நடுங்கத் தொடங்கின. அவன் முகம் குப்பென்று வியர்த்து விட்டது; வெளுத்தும் போய் விட்டது. அவன் இதயம் 'பட பட' வென்று அடித்துக் கொண்டது. அவன் அந்தக் கடிதத்தைப் பக்கத்தில் இருந்த சுவேதாங்கன் கையில் கொடுத்தான். பிறகு இரு கைகளாலும் தன் முகத்தை மூடிக் கொண்டு அங்கிருந்து தன் படுக்கையறைக்குச் சென்று விட்டான்.

எந்தக் காரியம் நடக்கும், நடக்கும் என்று பீஜகுப்தன் பயந்தானோ, அந்தக் காரியம் கடைசியில் நடந்தே விட்டது. சித்திரலேகா! அவளுடன் குமாரகிரி! ஆகா! என்ன விசித்திரமான ஜோடி! இதைக் கற்பனை செய்து பார்த்த மாத்திரத்திலேயே பீஜகுப்தன், 'நடக்காத காரியம்! இந்த ஜோடி அதிக நாள் நிலைத்திருப்பது என்பது நடக்காத காரியம்; ஆமாம், நடக்கவே நடக்காத காரியம்!' என்று தனக்குத்தானே மனதுக்குள் முணுமுணுத்துக் கொண்டான்.



ஆமாம், இதனால் எல்லாம் ஆகப் போவது என்ன? நடக்கும் காரியமாயிருந்தால் என்ன? அல்லது நடக்காத காரியமாகவே இருந்தால்தான் என்ன? பீஜகுப்தனுக்கு இதனால் எல்லாம் என்ன பிரயோஜனம்? பீஜகுப்தனுடைய மனதிலே 'சித்திரலேகா குமாரகிரியிடம் நாட்டம் கொள்ளுவானேன்?' என்ற கேள்விதான் சுற்றிச் சுற்றி வட்டமிட்டுக் கொண்டிருந்தது. இதைத்தான் காதல் என்கிறார்களோ? அப்படியானால் ஆத்மாவின் தொடர்பு அநித்தியமானதுதானோ? 'ஆத்மாவின் தொடர்பு நிரந்தரமானதல்ல, ஸ்வாமி!' என்று அன்றொரு நாள் சித்திரலேகா சொன்னாளே! அது உண்மையாகவே தானிருக்குமோ?

சித்திரலேகா பீஜகுப்தனைக் காதலிப்பதில்லை என்று முடிவுசெய்து விட்டாள் என்பதுதான் என்ன நிச்சயம்? அந்தக் கடிதத்தில் அம்மாதிரி யெல்லாம் ஒன்றும் எழுதியிருந்ததாகத் தெரியவில்லையே! கடிதத்தில் உள்ள விஷயம் வேறொரு விதமான அர்த்தத்தை யல்லவா கொடுத்துக் கொண்டிருந்தது! சித்திரலேகா காதலின் பொருட்டு மகத்தான தியாகம் ஒன்றைச் செய்கிறாள். அதாவது தியாகத் தீயில் தன்னைத்தானே அர்ப்பணம் செய்து கொள்ளுகிறாள் என்பதை அல்லவா அந்தக் கடிதம் சுட்டிக் காட்டியது! பீஜகுப்தனைச் சித்திரலேகா உதறித் தள்ளியதற்குக் காரணம், பீஜகுப்தனைச் சௌக்கியமான நிலையில் வைக்க வேண்டும் என்ற ஒரே ஒரு நோக்கம் தானே! சித்திரலேகாவின்மீது இப்படி அவநம்பிக்கை எழுந்ததற்காகப் பீஜகுப்தனுடைய மனம் தன்னைத்தானே நொந்து கொண்டது; சிந்தித்துக் கொண்டது. சித்திரலேகா தெய்வம் என்றால் தெய்வம் தான். ஆனாலும் அவள் தவறு இழைத்து விட்டாள். அதுவும் சாதாரணமான சின்னத் தவறு அல்ல; மிக மிகப் பெரிய அநியாயத் தவறு. பீஜகுப்தனுக்கு இன்பமளிப்பதாக எண்ணி அவள் அவனுக்கு மாபெரும் துன்பத்தை அல்லவா அளித்து விட்டாள்! பீஜகுப்தன் விவாகம் செய்து கொள்ளுவது என்பது கனவிலும்

பட்ட சக்திகள் ஒன்று கூடுகின்றனவே யொழிய அனைத்தும் ஐக்கியம் அடைந்து விடுவதில்லை. ஐக்கியம் அடைந்து விட்டால்தான் அப்புறம் தொல்லையே இல்லையே! அவை தனித் தனியேதான் இயங்குகின்றன. எந்த விதத்தில் வேண்டுமானாலும் நாம் அவை தனித் தனியாக இயங்குவதை அநுபவ வாயிலாக உணர்ந்து கொள்ள முடியும்.



ஆகவேதான் பீஜகுப்தனுடைய உள்ளத்திலே யசோதாராவின் நினைவு ஒரு அச்சம் கலந்த இன்பத்தைத் தந்தது; பிரமை கலந்த பிரியத்தைப் பரிமாறியது. உணர்ச்சிகளைக் கிளர்ச்சிகொள்ளச் செய்யும் உயிர்க்களையற்ற காதலாகப் பரிணமித்தது.

யசோதாரா உள்ளக் கோவிலில் பிரதிஷ்டை செய்து பூஜிக்கப்பட வேண்டிய தக்க விக்கிரகமாகத்தான் திகழ்ந்தாள். யசோதாராவினிடத்திலே பெண்மையின் பெருமையும் பரிசுத்தமும் சிறப்புற்று விளங்கின. யசோதாராவுக்கு தர்மத்திலே அபார நம்பிக்கை. அவள் தர்மதேவதையே உருவம் தரித்து வந்திருக்கிறாளோ என்று சொல்லும்படி தோற்றமளித்தாள். யசோதாராவின் அமிர்தத்தை வர்ஷிக்கும் விழிகளிலே அமைதி தாண்டவமாடியது; குளுமை ததும்பியது. பீஜகுப்தனோ வாழ்க்கையை விரும்பினான்; வாழ்க்கையிலே விறு விறுப்பை விரும்பினான். இன்ப போதையில் ஆழ்ந்திருந்து தன் நினைவு இழக்கச் செய்யும் உஷ்ண ரத்தம் உடல் முழுதும் பெருக்கு எடுத்து ஓடவேண்டும் என்று விரும்பினான். ஆகவேதான் பீஜகுப்தன் தன் வாழ்க்கையிலே யசோதாராவுக்கு இடம் கொடுக்கச் சிறிதும் விரும்பவில்லை.

ருசி கண்ட பூனை உரியை உரியைத் தாவும் என்பார்களே, அது போல ஒரு தடவை பானம் பருகிப் பழகியவன்— பானத்தின் ருசியையும் அதன் போதையையும் நன்கு அநுபவித்து உணர்ந்தவன் என்ன சொன்னாலும் அப்புறம் பானம் பருகுவதை நிறுத்த மாட்டான்; நிறுத்துவது என்பது அவனால் இலேசில் முடியாத காரியம். பீஜகுப்தனோ சித்திரலேகாவைக் காதலித்தான். அது மட்டும் அல்ல; அவளுடைய காதலின் மகத்துவத்தையும் நன்கு உணர்ந்திருந்தான். ஆகவே சித்திரலேகாவை நினைவுத் திரையிலிருந்து அகற்றுவதென்றால் அவனுக்கு அது மிகவும் சிரம சாத்தியமான காரியமாகத் தான் பட்டது.

பீஜகுப்தன் மாளிகையை அடைந்த பொழுது சித்திரலேகாவின் கடிதம் அவனுக்காகக் காத்திருந்தது. கடிதம் மிகச் சாதாரணமானதுதான்; மிகச் சிறியதும் கூட. ஆனால் அந்தச் சின்னஞ் சிறு கடிதம் வாழ்க்கையின் நீண்ட கதையாகக் காட்சி அளித்தது; மனோதத்துவத்தின் மாபெரும் நூலாகத் திகழ்ந்தது. அந்தக் கடிதம் இதுதான் :—

என் தெய்வமே!

என்றைக்குமே கனவிலும்கூடக் கருதியிராத ஒரு காரியத்தை நான் இன்று செய்யப் போகிறேன். நான் தங்களைக் காதலித்தேன். ஏன்? இப்பொழுதும் கூடத் தான் காதலிக்கிறேன். காதலில் தியாகம் வேண்டும் என்று சொல்லுவார்கள். நான் இன்று அதே தியாகத்தைச் செய்யத்தான் முன் வந்திருக்கிறேன். நான் தங்கள் வாழ்க்கையிலே புகுந்து அதை அர்த்தமற்றதாகச் செய்து விட்டேன். என்னுடைய காதல் எதற்கும் தகுதிவாய்ந்த புருஷரான தங்களை கடமை தவறியவராகச் செய்ய முற்பட்டு விட்டது. அதற்காக நான் மிகவும் வருந்துகிறேன். அதன் பிராயச்சித்தமாக இந்தச் சுக போக வாழ்க்கையை உதறித் தள்ளிவிட்டு புலனடக்க வாழ்க்கையை மேற்கொள்ளுவது என்று முடிவுக்கும் வந்து விட்டேன். ஆகவே யோகி குமாரகிரியிடம் தீக்ஷை பெறப்போகிறேன். தாங்கள் கட்டாயம் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும். தங்களுக்கு மனம் இல்லாமற் போனாலும் என் பொருட்டு என் வேண்டுகோளுக்கு இணங்கித் தாங்கள் கட்டாயம் மணம் செய்து

எப்பொழுதும் இனிமையாகக் ‘கல கல’ வென்று சிரித்துப் பேசிக் கொண்டிருப்பதையே தான் விரும்புகிறது. கஷ்ட நிஷ்டூரங்களைக் கண்டு அது கதி கலங்குவதில்லை. இடையிடையே ஏற்படும் இன்னல்களைக் கண்டு அஞ்சி அஞ்சிச் சாவதில்லை. எதையுமே இலேசாக எடுத்துக் கொண்டு தைரியமாக முன் நின்று எதிர்ப்பதிலே அதற்கு அலாதி ஆனந்தம். தன்னிடத்தில் ஒளிவு மறைவுக்குக் காளைப் பருவம் சிறிதும் இடம் கொடுப்பதில்லை. அது எப்பொழுதுமே தெளிவைத்தான் காட்டுகிறது. தன்னைத்தானே அடக்கி ஒடுக்கி ஆண்டு கொள்ளுவதென்றால் அதற்குச் சிறிதும் பிடிப்பதில்லை. நான்கு பேர்களுக்கு மத்தியில் கல கலப்பாகத் தானும் நடமாட வேண்டும் என்பதுதான் அதன் அந்தரங்க ஆசை. உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவார் உறவு கலவாமை வேண்டும் என்ற கொள்கையைத்தான் அது கடைப்பிடிக்க விரும்புகிறது.

ஆகவேதான் அது ‘தனக்குச் சரிநிகர் சமானமாகப் பழகக் கூடியவன்தானா? தன்னுடன் பழகத் தகுதி வாய்ந்தவன் தானா?’’ என்பதை யெல்லாம் நன்றாக ஆராய்ந்து பார்த்த பின்னரே ஒருவனைத் தன் தோழனாகத் தேர்ந்தெடுத்துக் கொள்ள விரும்புகிறது. மனமொத்து வாழ வழி செய்து கொள்ளுவதில் அதற்குத் தான் எத்தனை அக்கறை என்கிறீர்கள்! அநேகவிதமான பலதரப்பட்ட சக்திகள் ஒன்றுகூடி ஒருமைப்பட முயலுவதைத்தான் நாம் புரட்சி என்று பெயர் சொல்லி அழைக்கிறோம். ஆனால் புரட்சியில் பலதரப்



"தான் வாழ்க்கை!" என்று மெதுவாகச் சொல்லி முணு முணுத்தான்.

அதைக் கேட்ட யசோதரா உடனே சட்டென்று சுவேதாங்கன் மீதிருந்த தன் பார்வையை அகற்றினாள். அவளுடைய முகம் வெளுத்துப் போவதற்குப் பதிலாகச் சிவந்தது. சுவேதாங்கனும் நாணுக் குற்றுத் தலை கவிழ்ந்தான்.

• • •

யசோதராவிடத்திலும் ஒருவிதக் கவர்ச்சி இருக்கத்தான் செய்தது. அந்தக் கவர்ச்சியிலேதான் என்ன அழகு! என்ன இனிமை! ஆனால் அதில் உணர்ச்சியைக் கிளர்ச்சி கொள்ளச் செய்யும் உயிர்க்களை இருந்தால்தானே? யசோதராவின் அருகில் அமர்ந்து மனிதன் புனிதத் தன்மையை— அதாவது பரிசுத்தத்தைக் காணலாம்; பரிசுத்தத்தைப் பருகலாம்; பரிசுத்தத்தை அநுபவிக்கலாம்; ஏன்? தானேகூடப் பரிசுத்தமாக ஆகிவிடலாம். இருந்தபொழுதிலும் பீஜருப்தனுக்கு அதிலே ஒரு இன்பம் இருப்பதாகத் தோன்றவில்லை; மகிழ்ச்சி ஏற்படுவதாகவும் தெரியவில்லை. என்றுமே யாரிடமுமே கண்டறிந்திராத ஒரு புதுமையை அவன் யசோதராவினிடத்திலே கண்டான்.

யசோதராவின் கம்பீரமே உருவெடுத்த ஸௌந்தர்ய உருவம் அவனை ஒரு புது உலகுக்கே இட்டுச் சென்றுவிட்டது. ஆழங்காண இயலாத யசோதராவின் கம்பீரத்தை அவனால் சரிவரப் புரிந்துகொள்ள முடியவில்லை. புரிந்துகொள்ள முயல முயல அவள் அவனுக்கு ஒரு புரியாப் புதிராகவே ஆகிவிட்டாள். அவளுடைய பேச்சிலே ஒரு தெளிவு தாண்டவமாடியது; நேர்மை தவழ்ந்தது. அவளுடைய அந்தப் பேச்சிலே பொடி வைத்துப் பேசும் கபட நாடகச் சொற்கள் தாண்டவமாடவில்லை; அந்தச் சொற்களிலே கவி நயமோ, கவி சாதுர்யமோ தென்படவும் இல்லை. இவற்றை யெல்லாம் கண்ணுற்ற பீஜருப்தனுக்கு யசோதராவின் சாதனை மகத்தானது என்று தோன்றியது. அவனுக்கு யசோதராவினிடத்திலே அளவு கடந்த மதிப்பும் அபார மரியாதையும் உண்டாயிற்று. எவ்வளவோ முயன்றும் அவனால் தன் உள்ளத்திலே அவளுக்கு சிறிதும் இடம் கொடுக்க முடியவில்லை.



கட்டில் அடங்காத காளைப் பருவம் சதா சர்வ காலமும் கலகலப்பையேதான் விரும்புகிறது; விறுவிறுப்பையேதான் வேண்டுகிறது. 'உம்மணா மூஞ்சி' போல முகத்தைத் தொங்கவிட்டுக்கொண்டு கன கம்பீரமாக வாய் அடைத்து உட்கார்ந்திருப்பதை அது விரும்புவதில்லை.







பத்தொன்பதாம் அத்தியாயம்

## இதுதான் வாழ்க்கை!

பீஜகுப்தனைப்போல், யசோதராவின் உள்ளத்தைக் கவர்ந்து ஆட்கொள்ளத் தன்னால் முடியவில்லை என்பதை சுவேதாங்கன் நன்கு உணர்ந்திருந்தான். பீஜகுப்தனுக்கு இருந்த கம்பீரத் தோற்றமோ, சாவன்மையோ தனக்கு இல்லை என்பதும் அவனுக்குத் தெரியாத விஷயம் அல்ல. 'யசோதராவின் உள்ளத்தைத் தன்னால் கவர முடிகிறதா, இல்லையா?' என்பதை மறுபடியும் ஒரு முறை பரீக்ஷித்துப் பார்த்து விடவேண்டும் என்று தோன்றியது அவனுக்கு. ஆகவே அவன் அசாத்தியத் துணிச்சலை வரவழைத்துக் கொண்டு, "யசோதரா தேவி! மனிதன் விரும்புவது சுகமும் திருப்தியும் தரும் வாழ்க்கையைத் தான் என்றாலும் அவனுடைய வாழ்க்கையிலே உணர்ச்சியும் உற்சாகமும் பெருக்கெடுத்து ஓடவேண்டும். அப்பொழுதுதான் வாழ்க்கை நன்கு சோபிக்க முடியும். காதல், காதல், காதல்; இல்லையேல் சாதல், சாதல், சாதல்! ஆகவே இந்தக் காதல்தான் மனித வாழ்க்கையின் மாபெரும் லட்சியம் ஆகும். உள்ளத்திலே ஒரு புல்லரிப்பு, அந்தப் புல்லரிப்பிலே ஒரு இன்பம், அந்த இன்பத்திலே ஒரு வேட்கை, அந்த வேட்கையிலே ஒரு திருப்தி!—இதைத் தான் காம காதல் வழி என்று சொல்லுகிறோம். வாழ்க்கையில் மிகப் பிரதானமான அங்கம் வகிக்கும் பொருள் இந்தக் காதல் தான். ஆகவே வாழ்க்கையில் ஒருவர் மற்றொருவருடைய ஆத்மாவை நன்கு உணர்ந்து கொள்ள வேண்டியது மிகவும் அத்தியாவசியமாகும். அதற்கு முதற்படியாக ஒருவருக்கொருவர் ஆழ்ந்த அநுதாபம் கொள்ள வேண்டும். தான், 'தனி' என்னும் தன்மையை மறக்க வேண்டும்; ஈருடல் ஒருயிராக முயல வேண்டும். இவ்விதமாக இரண்டு ஆத்மாக்கள் இரண்டறக் கலப்பதைத்தான் காதல் என்னும் பெயர்கொண்டு அழைக்கிறோம். அதுதான் வாழ்க்கையின் மிக உயரிய அழகிய சீரிய லட்சியமும் ஆகும்!" என்று சொல்லி நிறுத்தினான்.

அதைக் கேட்டதும் யசோதரா தலை நிமிர்ந்து சுவேதாங்கனைப் பார்த்தாள். சுவேதாங்கனும் யசோதராவைப் பார்த்தான். இருவருடைய கண்களும் ஒன்று கலந்தன. சுவேதாங்கன் புளகாங்கித முற்றான். எவ்வளவு நேரம் வரை யசோதரா வைத்த கண் வாங்காமல் சுவேதாங்கனையே பார்த்துக் கொண்டிருந்தாள் என்று கணக்கிட்டுச் சொல்வதற்கில்லை. ஆனால் அந்தச் சில கணங்கள் சுவேதாங்கனை இன்ப போதையில் ஆழ்த்தி வைக்கச் செய்துவிட்டன. பீஜகுப்தன் இலேசாகச் சிரித்து, "இது

mென்று காத்துக்கொண்டே இருந்தது. அதற்கு இப்போது சமயம் வந்து விட்டது.

"அயோக்கியப் பயலே!" என்றது முதல் கழுகு.

"போக்கிரிப் பயலே!" என்றது இரண்டாவது கழுகு.

"உன்னைத் தொலைத்து விடுகிறேன்" என்று சொல்லிக் கொண்டே முதல் கழுகு இரண்டாவது கழுகின் மீது பாய்ந்தது.

"இன்று உன்னை நிச்சயமாகக் கொல்லப் போகிறேன்" என்று சொல்லிக் கொண்டே இரண்டாவது கழுகு முதல் கழுகின் முதுகின் மீது கொத்தியது.



வானத்திலே இரண்டு கழுகுகளுக்கும் பயங்கரமாகச் சண்டை நடந்தது. முதல் கழுகு தன் உயிரைக் காப்பாற்றிக்கொள்வதற்காக அணிலைக் கீழே போட்டுவிட்டது.

அணில் 'பொத்'தென்று கீழே வந்து ஒரு மரத்தின் மீது விழுந்தது. கீழே விழுந்த அதிர்ச்சியில் அது மூர்ச்சையாகி விட்டது. சற்று நேரம் கழித்து அது கண்ணைத் திறந்து பார்த்தது. என்ன ஆச்சரியம்! அது தன் சொந்த இடத்திற்கே வந்து சேர்ந்திருக்கிறது. பழைய ஆலமரம்தான் அது! திரும்பி வரவேண்டிய கஷ்டத்தையே அதற்கு வைக்காமல், கழுகே அதைக் கொண்டு வந்து அங்கு போட்டு விட்டது!

மிகவும் சிரமப்பட்டு அது கீழே சென்றது. தன் பொந்துக்குள்ளே புகுந்தது. இனிமேல் அவ்விடத்தை விட்டுப் போவதே இல்லை என்று பிரதிக்ஞை செய்து கொண்டது. கண்ணை மூடித் தூங்கத் தொடங்கியது.

# கவிஞர் அளித்த பிச்சை

கவியரசர் ரவீந்திரநாத டாகுர் எப்பொழுதும் ஏதாவது ஒரு வேலையில் ஈடுபட்டிருப்பது வழக்கம். அவர் ஒரு நிமிஷத்தைக் கூட வீணாக்குவதில்லை. ஒரு நாள் அவர் இரு கண்களையும் இறுக மூடிக் கொண்டு தம் அறையில் அமர்ந்திருந்தார்.

அப்பொழுது அந்த வழியே வந்த சாந்தி நிகேதனத்தின் தலைமைப் பேராசிரியர் க்ஷிதி மோகன் ஸென், கவியரசர் கண்களை மூடிக்கொண்டு பேசாமல் உட்கார்ந்திருப்பதைக் கண்டு ஆச்சரியமடைந்தார். உடனே அவரருகில் சென்று, "குருதேவ்! தாங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்? ஒரு நாளும் இல்லாமல் இன்று பேசாமல் உட்கார்ந்திருக்கிறீர்களே! என்ன காரணம்?" என்று மிகவும் பணிவுடன் கேட்டார்.

"பேசாமல் உட்கார்ந்திருக்கிறேனா? யார் சொன்னது? நான் காந்திஜிக்குப் பிச்சையல்லவா போட்டுக் கொண்டிருக்கிறேன்!" என்று பதில் அளித்தார் கவியரசர் டாகுர்.



அதைக் கேட்ட க்ஷிதி மோஹன் ஸென்னுக்கு இன்னும் வியப்பு மேலிட்டது. ஆகவே அவர், "குருதேவ்! தாங்கள் சொல்லுவது புதிர் போடுவது போல் அல்லவா இருக்கிறது! எனக்கு ஒன்றும் சரியாக விளங்கவில்லையே!" என்று கவியரசரைக் கேட்டார்.

"நான் கொஞ்ச நாட்களாக உடம்பு அசௌக்கியமாக இருக்கிறேன் அல்லவா? அதனால் மகாத்மா காந்தி வந்து, 'பதினைந்து நிமிஷங்களாவது தாங்கள் தினமும் ஓய்வு எடுத்துக் கொள்ளவேண்டும்' என்றார். நான் அதற்கு ஒப்புக்கொள்ளவில்லை. கடைசியில் அவர், 'எனக்குப் பிச்சை போடுவதாக எண்ணிப் பதினைந்து நிமிஷங்களைத் தாங்கள் விட்டுக் கொடுத்துத்தான் ஆகவேண்டும்' என்று கெஞ்சாக் குறையாகக் கேட்டுக் கொண்டார். நானும் 'சரி' என்று சொல்லி அவருக்குத் தினமும் பதினைந்து நிமிஷம் பிச்சை இட்டுக் கொண்டு வருகிறேன்!" என்றார் கவியரசர். —அக்ஷயம்.

டிய அவசியமே இல்லை. அடாடா! வாழைப்பழமும் ஆரஞ்சுப் பழமும் மாதுளம்பழமும் கொய்யாப்பழமும் கொத்துக் கொத்தாக காய்த்து அங்கே எப்படித் தொங்குகின்றன தெரியுமா? இப்போது நினைத்தாலும்கூட எனக்கு நாக்கில் எவ்வளவு நீர் ஊறுகிறது!''

இதைக் கேட்டதும் அணிலின் முகம் வாட்டம் அடைந்தது. கிளியும் அம்மரத்தில் வாழும் மற்றப் பறவைகளும் தன்னை மாத்திரம் அங்கே விட்டுவிட்டு, அந்தக் காட்டுக்குப் போய் நாள்தோறும் விதவிதமான பழங்களைச் சாப்பிட்டுக்கொண்டு சௌக்கியமாக இருக்கும் என்பதை நினைத்த போது அதற்குப் பொறாமை உண்டாயிற்று. ஆனால் அதை வெளியே காட்டிக்கொள்ளவில்லை. மிக்க கவலையுடன் தன் தோழனைப் பார்த்து, "எப்போது போகப் போகிறாய்?'' என்று கேட்டது அணில்.

"நாளைக் காலை எழுந்ததும் புறப்படப் போகிறேன்" என்றது கிளி.

அணில் ஒரு பெருமூச்சு விட்டது. அதன் கண்ணில் நீர் ததும்பியது.

கிளி அதைத் தேற்றியது. "நான் வாரத்துக்கு ஒரு முறை இங்கே வருகிறேன். உனக்கு நல்ல நல்ல பழங்களெல்லாம் கொண்டு வந்துதருகிறேன். நீ கவலைப் படாதே!'' என்று ஆறுதல் கூறியது.

அணில் அமைதி அடைந்ததுபோலக் கண்ணைத் துடைத்துக் கொண்டது.

சற்று நேரம் வரை இரண்டும் வேறு விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தன. பிறகு கிளி தன் நண்பனிடம் விடை பெற்றுக்கொண்டு தன் கூட்டுக்குச் சென்றது.

• • •

மறுநாள் காலை விடிந்தது. அணில் வெளியே வந்து பார்த்தது. ஒரு சத்தத்தைக் கூடக் காணோம். ஒரு பறவையைக் கூடக் காணோம். எல்லாம் புறப்பட்டுப் போய்விட்டன போலும்! அதற்கு உணவு செல்லவில்லை. தூக்கம் பிடிக்கவில்லை. தன் நண்பனாகிய கிளியையும் மற்றப் பறவைகளையும் அது நினைத்துப் பார்த்தது. இந்நேரத்தில் அவை அந்தக் காட்டில் எவ்வளவு ஆனந்தமாக இருக்குமோ? என்னென்ன வகையான பழங்களையெல்லாம் சாப்பிட்டுக் கொண்டிருக்குமோ?—வெகு தூரத்துக்கு அப்பால் மங்கலாகக் காணப்பட்ட அந்த மலையை ஏறிட்டுப் பார்த்தது. அதன் பொறாமை அதிகமாயிற்று. கடைசியில் தானும் அங்கு புறப்பட்டுச் செல்லுவது என்று முடிவு செய்தது.

மறுநாள் காலை பொழுது விடிவதற்கு முன்பே அது எழுந்துவிட்டது. உற்சாகமாகப் புறப்பட்டது. ஓட்டமும் நடையுமாகச் சென்றது அது. தாவித் தாவி, பாய்ந்து பாய்ந்து ஓடியது அது. கல்லையும் முள்ளையும் பொருட்படுத்தவில்லை; சேற்றையும் குழிகளையும் லட்சியம் பண்ணவில்லை. வில்லிலிருந்து விடுபட்ட அம்பைப் போலத் திரும்பிப் பார்க்காமல் சென்றது. சூரியன் கொஞ்சம் கொஞ்சமாக மேலே வந்து கொண்டிருந்தான். நேரமும் ஆகிக்கொண்டே வந்தது. அணில் எங்கும் நிற்காமல் விரைந்து சென்றது. காலை மறைந்தது. நடுப்பகல் கழிந்தது. மாலையும் வந்தடைந்தது. பொழுது சாய்வதற்கு இன்னும் கொஞ்சநேரமே இருந்தது. அணில் முன்னால் பார்த்தது. மலை இன்னும் எவ்வளவோ தூரத்துக்கு அப்பால் இருந்தது. பத்தில் ஒருபாகம் கூட இன்னும் கடக்கவில்லை போலத் தோன்றியது. களைத்துப் பெருமூச்சு விட்டது. உடம்பெங்கும் ஒரே வலியாக இருந்தது. அதற்குமேல் ஒரு அடிகூட அதனால் நகர முடியவில்லை. இன்னும் கொஞ்ச நேரத்திற்குள் இருட்டிவிடும். எங்கே



தங்குவது? — அணில் தன்னுடைய நிலைமையை எண்ணிப் பார்த்தது. தன்னுடைய முட்டாள்தனம் அதற்கு விளங்கியது. "பறவைகளுக்கு இறக்கைகள் இருக்கின்றன: எவ்வளவு தூரமானாலும் அவை இலகுவாகப் போய்விடும். என்னால் அந்த மாதிரிப் போக முடியுமா? எனக்கு இது ஏன் தெரியாமல் போய் விட்டது? நான் புறப்பட்டு வந்திருக்கவே கூடாது. எனக்கு அங்கே என்ன குறைவு? உண்ண உணவு இல்லையா? இருக்க இடம் இல்லையா? நானாக என் வாழ்க்கையைக் கெடுத்துக் கொண்டேனே!— இப்போது நான் என்ன செய்வது? ஆ, தெய்வமே!" என்று புலம்பத் தொடங்கியது.

அப்போது ஒரு கழுகு இரை தேடிக் கொண்டு அந்தப் பக்கமாகப் பறந்து வந்தது. அது அணிலைக் கண்டது. உடனே கீழே பாய்ந்தது. தன் கால் நகங்களால் அதைப் பற்றிக் கொண்டு மேலே சென்றது. அணில் கத்தியது. கூச்சல் போட்டது. என்ன பிரயோஜனம்? யமனிடம் சென்றவர்கள் மீள்வது உண்டா?

கழுகு விரைந்து பறந்து சென்றது. வெகு வேகமாகப் பறந்து சென்றது. வானத்தையே கிழித்துக் கொண்டு போவதுபோல் இருந்தது அது. கிடைத்த இரையை விரைவில் சாப்பிட வேண்டும் என்ற ஆசையால் தூண்டப்பட்டு அது வேகமாகச் சென்றது. சற்று நேரம் கழிந்திருக்கும். அப்போது எதிரில் மற்றொரு கழுகு வந்தது. அது முதல் கழுகைப் பார்த்தது. 'ஹஹஹா!' என்று பயங்கரமாகச் சிரித்தது. "பயலே, இன்று நீ என்னிடம் அகப்பட்டுக் கொண்டாயா?" என்று சொல்லிக் கொண்டே முன் நோக்கிப் பாய்ந்து வந்தது.

அந்த இரண்டு கழுகுகளுக்கும் வெகுநாளாகப் பகை. ஒருநாள் இரண்டாவது கழுகு ஏதோ இரை தேடிக் கொண்டு ஆவலாகக் கூட்டுக்குப் போகும்போது, முதல் கழுகு அதை வழிமறித்து அதனோடு சண்டை போட்டது. சண்டை வலுக்கவே, இரண்டாவது கழுகு தன் காலில் வைத்திருந்த இரையைக் கீழே போட்டு விட்டது. சண்டை முடிந்து அது கீழே பார்த்த போது இரை கிடைக்கவில்லை. அன்று முதல் அது பழிக்குப் பழி வாங்க வேண்டு



இதோ, இந்தப் படத்தில் ஒரு குடிசை காணப்படுகிறது அல்லவா? அந்தக் குடிசைக்குச் சொந்தக்காரனும், அவனுடைய மனைவியும், அவர்கள் வளர்த்துவரும் நான்கு பிராணிகளும் புதர்களுக்குள்ளே மறைந்திருக்கிறார்கள். அவர்களைக் கண்டு பிடியுங்கள், பார்ப்போம்!



# அதிசய உதவி

எம். எல். எஸ்.

ஒரு பெரிய ஆலமரம். அந்த ஆல மரத்தில் ஒரு பொந்து இருந்தது. அதில் ஒரு அணில் வசித்து வந்தது.

உணவுக்கு அது ஒரு நாள் கூடக் கஷ்டப்பட்டது கிடையாது. அது மிக்க முன் ஜாக்கிரதையானது. ஐந்து ஆறு மாதங்களுக்கு வேண்டிய உணவைக்கூட அது முன்னாலேயே சேகரித்து வைத்துக்கொள்ளும்.

அந்த ஆலமரத்தில் காக்கை, குருவி முதலிய பல பறவைகள் கூடுகட்டி வாழ்ந்து வந்தன. அவற்றில் ஒரு கிளி இருந்தது. அந்தக் கிளிக்கும் அணிலுக்கும் மிக்க சிநேகம். ஒவ்வொரு நாளும் இரவில் சாப்பிட்ட பிறகு, அவை இரண்டும் வெகுநேரம் வரை பேசிக் கொண்டே இருக்கும். அன்றைய தினம் சென்ற இடம், கிடைத்த உணவு, நடந்த சம்பவம்—முதலியவற்றைப் பற்றி ஒன்றோடொன்று சொல்லிக் கொள்ளும்.

ஒருநாள் இரவு கிளி மிகவும் வாட்டமாக உட்கார்ந்திருந்தது. அணில் அதைப் பார்த்து, "நண்பா, உனக்கு என்ன கவலை? ஏன் இப்படி உட்கார்ந்திருக்கிறாய்?" என்று கேட்டது.

"நாங்கள் இவ்விடத்தை விட்டுப் போகப் போகிறோம்" என்றது கிளி.

அணில் திடுக்கிட்டது. "ஏன்?" என்று கேட்டது.

"இப்போது மழைகாலம் வந்து விட்டது. உணவு கிடைப்பது மிகவும் கஷ்டமாக இருக்கிறது. எவ்வளவு தூரம் சுற்றி அலைந்தாலும் ஒரு பழம் கூடக் கிடைப்பதில்லை. ஆகையால் நானும் இங்குள்ள மற்ற தோழர்களும் இவ்விடத்தை விட்டு வேறு இடத்துக்குப் போவதென்று முடிவுசெய்து விட்டோம்."

"வேறு எங்கே போகப் போகிறீர்கள்?" என்று கவலையுடன் கேட்டது அணில்.

கிளி எதிர்க்காற்போல இருந்த ஒரு மலையைச் சுட்டிக் காட்டி, "அதோ அந்த மலைக்குப் பின்னால் ஒரு காடு இருக்கிறது. அந்தக் காட்டுக்குப் போகப் போகிறோம்" என்றது.

"அங்கே மாத்திரம் உனக்கு வேண்டிய உணவு கிடைத்து விடுமா?"

"அடேயப்பா, அதை ஏன் கேட்கிறாய். போ!—வருஷம் முந்நூற்று அறுபத்தைந்து நாளும் உட்கார்ந்த இடத்திலேயே உட்கார்ந்தபடி சாப்பிட்டுக் கொண்டிருக்கலாம். இரை தேடுவதற்காக வெளியே போகவேண்



## குஜராத்தி மண்டல்

● இந்தியா தேசம் இன்று குஜராத் மாகாணத்துக்குக் கடமைப் பட்டிருக்கிறது. குஜராத் அளித்த காந்தி மகான் இந்தியாவுக்கு விடுதலை தேடித் தந்தார். அதோடு சென்னை மாகாணமும் குஜராத்துக்குக் கடமைப் பட்டிருக்கிறது. நம் கவர்னர் பவநகர் மகராஜா குஜராத்தைச் சேர்ந்தவர்தான். சென்னை நகரில் குஜராத்தியர் பலர் நெடு காலமாகக் குடியேறி



## வெள்ளி விழா

பல வர்த்தகத் துறைகளி
லும் ஈடுபட்டுச் செழிப்
படைத் திருக்கிறார்கள்.
'குஜராத்தி மண்டல்' என்ற
ங்கத்தையும் ஏற்படுத்திக்
கொண்டிருக்கிறார்கள்.
சென்ற மாதத்தில் 'குஜ
ராத்தி மண்டல்' வெள்ளி
விழா பவநகர் மகாராஜா
ன் தலைமையில் மிகச்
ப்பாக நடைபெற்றது.
வெள்ளி விழாக் காட்சி
களில் சிலவற்றை இங்கே
ணலாம்.





# பாத சமர்ப்பணம்

**சங்கீத வித்வான் ஸ்ரீ ஜி. என். பாலசுப்பிரமணியம்**

சங்கீத கலாநிதி, சாஸ்திர விசாரத ஸ்ரீ டைகர் வரதாச்சாரியார் அவர்கள் காலமானதைக் கேட்டு, சங்கீத வித்வான்களும் ரஸிகர்களும் மிகவும் வருந்துகிறார்கள். ஸ்ரீ டைகர் வெகு காலமாக அவரது கடைசி நாள் வரை சம்பிரதாயமாகவும், விரிவான முறையிலும் பாடிக்கொண்டே இருந்தவர். அடியேனுக்குச் சென்ற இருபத்தைந்து வருஷங்களாக அவர் சங்கீதத்தைக் கேட்கவும், 1933—1934ல் அவரிடம் மாணாக்கனாகச் சென்னை சர்வகலாசாலை வகுப்பில் சங்கீதம் கற்றுக் கொள்ளவும் பாக்கியம் கிடைத்தது.

1924—1926ல் திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தசாரதிஸ்வாமி சபை மும்முரமாக நடக்கும் சமயம். வித்வான் சபேசய்யரவர்கள், கரூர் சின்னஸ்வாமி அய்யரவர்கள், டபிள்யூ. துரைஸ்வாமி அய்யங்காரவர்கள், கீர்த்தனாசாரிய ஸி. ஆர். சீனுவாச அய்யங்கார் முதலானோர்களின் முன்னிலையில் ஸ்ரீ டைகர் மேற்படி சபாவில் செய்துள்ள கச்சேரிகள் இப்போதும் அக்கச்சேரிகளைக் கேட்ட காதுகளில் இன்னும் அதே பிரகாசத்துடன் ஒலிக்கின்றன. ஒரு சமயம் எட்டு களைச் சவுக்கத்தில் வெகு அழகாகவும், சம்பிரதாயமாகவும், தோடியில் விஸ்தாரமாகப் பல்லவி பாடியதைக் கேட்டவர்கள் அதை என்றும் மறக்க முடியாது. ஒருநாள் காலை திருவல்லிக்கேணி தேரடி வீதியில் வக்கீல் ஸ்ரீ ஏ. என். ரங்கஸ்வாமி அய்யங்கார் வீட்டில், ஸ்ரீ சபேசய்யர், ஸ்ரீ பிடாரம் கிருஷ்ணப்பா, என் தகப்பனார் இன்னும் பல ரஸிகர்கள் முன்னிலையில் விளையாட்டாக பிலஹரி பாட ஆரம்பித்துச் சுமார் 2-மணி நேரம் பாடி "தொலிஜன்மமுன சேயு" என்ற கீர்த்தனத்தில் நிரவல், ஸ்வரம் வெகு விசித்திரமான முறையில் வின்யாஸங்களுடன் பாடினார். அச்சமயம் என் குருவாகிய ஸ்ரீ மதுரை சுப்ரமண்ய அய்யர் அவர்கள் தான் பிடில் வாசித்தார்.

ராகம் பாடும் முறைகளில் ஸ்ரீ டைகர் வரதாச்சாரியார் பாணியின் பூர்த்தியான அழகைக் காணலாம்.

பூர்ண சந்த்ரிகை, ஜனரஞ்சனி, பிரதாப வராளி, கதன குதூகலம் இவையெல்லாம் அவர் பாடின சம்பிரதாய, விரிவான மனோதர்மமுள்ள முறையில் இனி கேட்கமுடியாதென்று நிச்சயமாகச் சொல்லலாம். ஸ்வரம் பாடும் சமயம், ஒவ்வொரு ஸ்வரத்திலும் அந்த ராகத்தின் சுயேச்சையான ருசியின் உருவம் தாண்டவமாடும் என்பது அனுபவித்தவர்களுக்குத்தான் உணர முடியும். இப்பேர்ப்பட்ட உயர்ந்த மனோதர்மமுள்ள சங்கீதத்தைப் பிற்காலத்தில் உபமானமாகவாவது கேட்பதற்கு 'ஒலிப்பதிவு' செய்ய ஏற்பாடு பண்ணாதது மன்னிக்க முடியாத குற்றமெனக் கருதலாம். ஏனென்றால் மற்றவர்களைப் போல் அவர் இப்படிப் பாடுவார் என்று (Imitate செய்து) பாடிக் காட்டமுடியாது. சாதாரணமாக அடதாள வர்ணங்கள், "கொலுவை யுன்னாடே" பைரவி கீர்த்தனம் முதற்கொண்டு மூன்று காலம் அவர் பாடிக் கேட்டிருக்கிறேன். அவர் பாடிக் கேட்கும் பொழுது சமுத்திரத்தைப் பார்க்கும் சமயம் தோன்றுவது போல் ஒரு பயம் ஏற்படும். அவரே கலாநிதி.

காலம் சென்ற ஸ்ரீ சபேசய்யரவர்களை என் தகப்பனார் "கடினக்ராஹி" என்று சொல்லுவார். அதாவது சுலபமாக அவரிடம் பாடிச் "சபாஷ்" வாங்க முடியாது. ஸ்ரீ சபேசய்யரவர்களே டைகரின் பாட்டை முதல் தடவை கேட்டு, ஸ்ரீ மஹா வைத்யநாதய்யரவர்களுடைய சுகமும், ஸ்ரீ பட்டணம் சுப்ரமண்ய அய்யர் அவர்களுடைய வேலைப்பாடும் ஒருங்கே சேர்ந்து பாடும் நிபுணர் என்று சொன்னார். இதைவிடச் சங்கீதத்தின் சிகரம் வேறென்ன? மூன்று தலைமுறைக்கு முன்னால் உள்ள சங்கீதத்துக்கும் இப்போதுள்ள சங்கீதத்துக்கும் ஸ்ரீ டைகர் தொடர்பாக இருந்தார். அவர் ஒரு உண்மையான கலைஞர். உறங்கும் நேரம் ஒழிய, மற்ற வேளைகளில் எல்லாம் நாதோபாஸனையிலேயே ஊன்றி யிருப்பவர். சங்கீதத்திலும், சுபாவத்திலும், விசாலமான பரந்த நோக்கமுடையவர். அவர் பாட்டைக் கேட்பது என்பது ஒரு தனிப்பட்ட அனுபவம்., வாழ்க்கையில் என்றும் மறக்க முடியாத அனுபவம்.

இவ்வளவு காலம் அவருடன் பழகிச் சங்கீதம் கேட்கும் பாக்கியம் கிடைத்ததே என்ற பெருமிதத்துடனும், இனி அம்மாதிரி அனுபவிக்க முடியாதே என்ற துக்கத்துடனும் இந்தக் கட்டுரையை அவருடைய பாதத்தில் சமர்ப்பிக்கின்றேன்.

ஊரெல்லாம் ஒரு நிமிஷத்தில் பரவி விடுமே? அதைவிட என் நாவைத் துண்டித்து விடுவதே மேல் என்று நினைத்தேன்.

உதவி ஆசிரியர் ஜகதீசய்யர் ஹெட்மாஸ்டரிடம் எங்கள் தெருச் சண்டையைப் பற்றிச் சொல்லி விட்டார். ஹெட்மாஸ்டர் என்னை அழைத்து விசாரித்தார். வைத்தியுடன் வலுச் சண்டைக்குப் போனதற்குக் காரணம் கேட்டார். நான் சொல்ல மறுத்தேன். வேறு யாரிடம் சொன்னாலும் அவரிடம் சொல்லக்கூடாதல்லவா? கடைசியில் "இந்தத் தடவை மன்னித்து விட்டேன். இனிமேல் இப்படியெல்லாம் செய்யாதே!" என்று எச்சரித்தார். அத்துடன் அச்சம்பவம் முடிந்து விட்டதாகத் தோன்றியது.

ஆனால் ஹெட்மாஸ்டர் என்னை நடத்திய முறையில் சீக்கிரத்திலேயே வித்தியாசத்தைக் கண்டு கொண்டேன். பழைய அபிமானமும் நம்பிக்கையும் என்னிடம் இல்லையென்றே தோன்றியது. அவர்களுடைய வீட்டுக்கு நான் வருவதைக் கூட அவ்வளவாக அவர் விரும்பவில்லையென்று காணப்பட்டது. அதைக் காட்டிலும் முக்கியமாக, நானும் தேவகியும் பேசுவதைப் பார்த்தால் ஹெட்மாஸ்டரின் முகம் கருங்கிற்று. "தேவகி! என்ன வீண் பேச்சு? போய்ப் பாடத்தைப் படி!" என்பார். இதுமட்டுமல்லாமல் என்னிடம் அவர் தனிமையில் பேச நேரும்போது "கிருஷ்ணசாமி! தேவகிக்கு ஒரு நல்ல வரன் பார்த்துக் கொண்டிருக்கிறேன். நான் வாழ்க்கையில் ரொம்பவும் வறுமையால் கஷ்டப்பட்டவன். தேவகியையாவது நல்ல பணக்காரப் பிள்ளைக்குப் பார்த்துக் கொடுத்துவிட விரும்புகிறேன். பணக்காரப் பிள்ளையாயிருந்தால் மட்டும் போதாது; குறைந்தது பி. ஏ. படித்தவனாயிருக்க வேண்டும். பெருமானுடைய சித்தம் எப்படியிருக்கிறதோ? உனக்கு யாராவது நல்ல வரன் தெரிந்திருந்தால் சொல்லு!" என்று கூறுவார்.

இந்த வார்த்தை என் நெஞ்சை வாள் கொண்டு அறுப்பது போலிருக்கும். எனக்கு நானே புத்தி சொல்லிக் கொண்டு ஆறுதல் அடையப் பார்ப்பேன். "தேவகிக்கு எப்படியும் ஒரு நாள் கலியாணம் நடக்க வேண்டியது தானே? ஆஸ்திபாஸ்தி ஒன்றுமேயில்லாத நாம் அதைப்பற்றி யோசித்து என்ன பயன்? நமக்குப் படிப்பும் கொஞ்சம். பி. ஏ. வகுப்பை எட்டிப் பார்க்கவும் முடியாது. வயதுப் பொருத்தம் கூட இல்லை. பின்னே, எதற்காகக் கவலைப்பட வேண்டும்? ஹெட்மாஸ்டர் சொல்வது நியாயந்தானே?" என்று பலவிதமாக எண்ணி யோசித்து முடிவு செய்வேன். ஆனாலும் தேவகிக்குக் கலியாணம் நடக்கப் போகிறது என்ற எண்ணம் என் மனதில் ஏதோ ஒரு வேதனையைக் கொடுத்துக் கொண்டிருந்தது.

"வைத்திக்கும் எனக்கும் சண்டை எழுந்த காரணத்தைப் பற்றி ஹெட்மாஸ்டருக்குத் தெரிந்திருக்குமோ, ஒரு வேளை சுந்தரம் சொல்லியிருப்பானோ?" என்று எண்ணி எண்ணி என் உள்ளம் தத்தளித்தது. அல்லது வைத்தியே ஒருவேளை ஏதாவது உளறியிருக்கலாம்; குற்றத்தை என்பேரில் சுமத்தியிருக்கலாம். ஆனாலும் அதைப் பற்றி யாரிடமும் பேசவோ, கேட்கவோ முடியவில்லை. சண்டைக்குப் பிறகு வைத்தியும் நானும் பேசுவதேயில்லை. என்னைப் பற்றி அவன் நான் இல்லாத சமயங்களில் ஏதேதோ கோள் சொல்லி அவதூறு பேசி வருகிறான் என்று தெரிந்திருந்தது. ஆயினும் பழைய அநுபவம் காரணமாக அதைப் பற்றிக் காதிலேயே போட்டுக் கொள்ளாமல் இருந்து விட்டேன். இரண்டாவது தடவை அவனோடு சண்டை போட எனக்கு இஷ்டமில்லை.

இப்படியாகக் காலம் போய்க் கொண்டிருந்தது. என் வாழ்க்கையில் ஏற்பட்டிருந்த புத்துணர்ச்சியும் ஆனந்தமும் மறைந்து விட்டன. கவலையும் சந்தேகமும் மனதை அரித்துக் கொண்டிருந்தன. இவ்வளவுக்கு மிடையில் தேவகி எப்போதும்போல் என்னிடம் பிரியம் காட்டி வந்தது ஒன்றுதான் ஒருவாறு திருப்தி அளித்து வந்தது. "ஏன் இப்பொழுதெல்லாம் வீட்டுக்கு வருவதில்லை?" என்று தேவகி என்னைப் பார்க்கும் போதெல்லாம் கேட்கத் தவறுவதில்லை. ஆனால் அவளுடைய தகப்பனார் நான் வருவதை விரும்பவில்லையென்று அவளிடம் நான் எப்படிச் சொல்வேன்? சொன்னால்தான் அதில் பயன் என்ன? (தொடரும்)

பான். இவனால் எனக்கு வீட்டு விஷய மான கவலையே இல்லாமலிருக்கிறது!'' என்றார் ஹெட்மாஸ்டர். அவரிடம் அப்போது எனக்கு எல்லை கடந்த நன்றி உணர்ச்சி உண்டாயிற்று.

ஹெட்மாஸ்டர் குடியிருந்த வீட்டின் வாசலில் சில மந்தாரை, பவழமல்லி முதலிய புஷ்பச் செடிகளுக்கு மத்தி யில் ஒரு பழைய காலத்துச் சாதி முல்லைக் கொடியும் வளர்ந்து படர்ந்து பூத்துக் கொட்டி யிருந்தது. ஒடிந்து விழுந்து விடுவாளோ என்று தோன் றும்படி ஒல்லியான தேகத்துடன் தேவகி அந்த வீட்டுக்குள் புகுந்த போது, பெண்களைப் 'பூங்கொடி' என்று சொல்வதின் பொருத்தம் எனக்கு விளங்கிற்று. இன்றைக்குக் கூட நான் தேவகியைப் பற்றி நினைத் தால், அந்த சாதி முல்லைக் கொடியும் அதில் பூத்திருந்த மலர்களின் மணமும் சேர்ந்து எனக்கு ஞாபகம் வருகின்றன.

4

தேவகி எங்கள் ஊருக்கு வந்து சில நாள் வரையில் என் வாழ்க்கையே குதூகல மயமா யிருந்தது. வழக்கம் போலவே ஹெட்மாஸ்டர் வீட்டுக்கு அடிக்கடி போய் வந்தேன். அம்மா வுக்கு உதவி செய்தது போலவே மக ளுக்கும் உதவி புரிந்து வந்தேன். சில சமயம் கணக்கு முதலிய பாடங்களில் தேவகி சந்தேகம் கேட்டால் சொல்லிக் கொடுப்பேன். தேவகிக்கும் என்னை ரொம்பப் பிடித்து விட்டதாகத் தோன்றியது. அம்மாவைப் போலவே பெண்ணும் ஒரு நாள் நான் அவர்கள் வீட்டுக்குப் போகாவிட்டால், "எங்கே நேற்றுக் காணோம்?'' என்று கேட்கத் தொடங்கினாள். அவர்களுக்குள் ஒரு வித்தியாசம் என்னவென்றால், தாயார் என்னிடம் பின்னை முறை பாராட்டி என்னை ஏக வசனத்தில் அழைப்பாள். புதல்வி மரியாதையாக 'வாங்கள்' 'போங்கள்' என்று கூறுவாள்.

இவ்விதம் சிலகாலம் நான் ஆனந்த மயமான வானுலகத்தில் சஞ்சரித்து வாழ்ந்து வந்தேன். திடீரென்று அந்த வானில் கருமேகம் ஒன்று தோன் றியது. முதலில் சிறியதாகத் தோன் றியது வர வரப் பெரிதாகிப் படர்ந் தது. இடியும் மின்னலும் புயலும் மழையும் தொடர்ந்து வந்தன.

தேவகி எங்கள் பள்ளிக்கூடத்தில் ஐந்தாவது பாரத்திலே சேர்ந்தாள்.



வகுப்பில் எல்லாப் பிள்ளைகளும் பெஞ்சிகளில் உட்கார்ந்திருப்பார்கள். தேவகிக்கு மட்டும் சற்றுத் தள்ளி ஒரு தனி நாற்காலி போடப்பட்டிருக்கும். அதில் அவள் உட்கார்ந்துகொள்வாள். இதைக் குறித்துச் சில மாணாக்கர்கள் ஒரு விதமாகப் பேசுவதுண்டு என்று எனக்குத் தெரிய வந்தது. பராபரியாகக் கேள்விப்பட்டேனே யன்றி, என் காதில் அத்தகைய பேச்சு எதுவும் விழாமல் கொஞ்ச நாள் வரையில் இருந்தது. ஆகையால், மனதிற்குள் ஆத்திரப்பட்டேனே தவிர அதைப் பற்றி நான் ஒன்றும் சொல்ல முடியவில்லை. கடைசியாக, ஒரு நாள் என் காதுபடக் கேட்டு விட்டேன். ஆறாவது பாரத்தில் இரண்டு வருஷம் தேறாமல், மூன்றாவது வருஷம் படித்த ஒரு பையன் இருந்தான். அவன் பெயர் வைத்தியநாதன். பணக்கார வீட்டுப் பிள்ளை. அகம்பாவமும் பிடித்தவன். வம்புப் பேச்சுப் பேசும் வழக்கம் ரொம்ப உண்டு. ஆசிரியர்களைப் பற்றிக்கூடச் சில சமயம் கன்னா பின்னா என்று மரியாதைக் குறைவாகப் பேசுவான். அவனோடு நான் சகவாசமே வைத்துக் கொள்வதில்லை.

ஒருநாள் நான் ஹெட்மாஸ்டர் வீட்டுக்குப் போய்விட்டு ஹாஸ்டலுக்குத் திரும்பி வந்து கொண்டிருந்தபோது வைத்தியநாதனும் இன்னொரு பையனும் சாலை ஓரத்தில் நின்று பேசிக்கொண்டிருந்தார்கள். என்னைச் சுட்டிக் காட்டி வைத்தியநாதன் ஏதோ சொன்னான். இன்னொரு பையன் 'ஓஹோ!' என்று சிரித்தான். அதைக்கூட நான் பொருட்படுத்தவில்லை. நான் பாட்டுக்குச் சாலையின் இன்னொரு ஓரமாகப் போனேன். ஆனால் வைத்தியநாதனுக்கு அன்றைக்கு ஏதோ பிசாசு பிடித்திருந்தது. ஆகையால் என் காதில் விழும்படி அவன் ஹெட்மாஸ்டர் பெண் தேவகியைப் பற்றிப் பேசினான். என்னையும் அவளையும் சேர்த்தே பேசினான். என்ன பேசினான் என்று இங்கே எழுதி என் பேனாவையும் காகிதத்தையும் கறைப்படுத்த நான் விரும்பவில்லை.

அதைக் கேட்டேனோ இல்லையோ, எனக்கு ஆவேசம் வந்துவிட்டது. அவ்வளவு தைரியமும் தேகபலமும் எனக்கு எப்படி அச்சமயம் வந்தன என்பதை நினைத்தால் இப்போதுகூட வியப்பாயிருக்கிறது. ஒரே பாய்ச்சலில் அவனருகில் சென்று அவன் கன்னத்தில் பளீர் என்று ஒரு அறை விட்டேன். வைத்தி நல்ல தடியன்; 'புட்பால்' நன்றாக ஆடுவான். கால்பந்து ஆடி ஆடிக் காலில் அவனுக்கு வைரம் பாய்ந்திருந்தது. என்னை ஒரு உதை விட்டான். என் முழங்காலில் பட்டுப் பிராணனே போய்விட்டது. ஆயினும் நான் பணிந்து விடவில்லை. இரண்டு பேரும் சிறிது நேரம் துவந்த யுத்தம் செய்தோம். வீதியில் விழுந்து புரண்டோம். வைத்தி என் கழுத்தைப் பிடித்து நெரிக்க ஆரம்பித்தான். எனக்கு மூச்சுத் திணற ஆரம்பித்து விட்டது. நல்ல வேளையாக அந்தச் சமயத்தில் எங்கள் பள்ளிக்கூட ஆசிரியர் ஒருவர் வந்தார். ஹெட்மாஸ்டரைக் காட்டிலும் அவர் பிள்ளைகளின் கட்டுப்பாட்டை நிலை நிறுத்துவதில் கண்டிப்பானவர். அவர் எங்கள் அருகில் வந்து அதட்டியதும் இருவரும் சண்டையை நிறுத்தினோம். இருவரையும் அவர் கடுமையாகத் திட்டிவிட்டுப் பள்ளிக்கூடம் வந்ததும் தண்டிக்கப் போவதாகச் சொன்னார். வைத்தி உடனே "என்பேரில் தப்பில்லை, ஸார்! நான் பாட்டுக்குச் சுந்தரத்துடன் பேசிக் கொண்டிருந்தபோது இவன் தான் வலுச்சண்டைக்கு இழுத்தான். திடுதிடுவென்று வந்து கன்னத்தில் பளீர் என்று அறைந்தான். சுந்தரத்தை வேணுமானால் கேட்டுப் பாருங்கள்!" என்றான். "சுந்தரத்தைக் கேட்பதென்ன? இவனையே கேட்கிறேன். வைத்தி சொல்வது உண்மையா?" என்று என்னைப் பார்த்து ஆசிரியர் அதட்டிக் கேட்டார். நான் பதில் சொல்லாமல் திகைத்து நின்றேன். வைத்தி கூறியது என்னவோ உண்மைதான். முதலில் வைத்தியின் கன்னத்தில் அறைந்தவன் நான்தான். ஆனால் எதற்காக? அந்தக் காரணத்தை வெளியிட்டுச் சொல்ல எனக்கு இஷ்டமில்லை. அதைச் சொல்வதைக் காட்டிலும் ஆசிரியரின் தண்டனையைப் பெறுவதற்கும் மற்றவர்களிடம் அவமானப் படுவதற்கும் தயாராயிருந்தேன். தேவகியையும் என்னையும் சேர்த்து வைத்தி பேசிய ஆபாச வார்த்தைகளை எப்படி நான் திருப்பிச் சொல்வேன்? சொன்னால் அந்தப் பேச்சு

றால், குழந்தையும் 'நான் வந்து விடு கிறேன்' என்று கடிதத்துக்கு மேல் கடிதமாக எழுதுகிறாள். 'பெண் கல்வி' 'பெண் கல்வி' என்று வாய் கொண்ட மட்டும் எல்லாரும் கூச்சல் போடுகிறார்களே? இந்த ஊரில் பெண் களுக்கு என்று ஒரு ஹைஸ்கூல் இல்லை, பாரேன்!'' என்றாள் மாமி.

''இந்த ஊரில் பெண்களுக்கு ஹைஸ்கூல் வைத்தால் என்ன பிர யோஜனம், மாமி? பெஞ்சிகளும் நாற் காலிகளுந்தான் படிக்க வேண்டும். இந்த ஊர்ப் பெண்கள் யாரும் நாலா வது வகுப்புக்கு மேல் தாண்டிவரு வதேயில்லை!'' என்றேன் நான்.

3

ஹெட்மாஸ்டரும் நானும் தேவ கியை அழைத்துக் கொண்டு வருவதற் காக ரயில்வே நிலையத்துக்குப் போயிருந்தோம். தெரிந்த மனிதர்க ளுடன் தேவகியைக் கூட்டி ரயிலேற்றி அனுப்புவதாகச் சென்னையிலிருந்து கடிதம் வந்திருந்தது. ரயில் எப்போது வரப் போகிறது என்று எனக்கு ஒரே ஆவலா யிருந்தது. கடைசியாக, ரயில் வந்தது. நாங்கள் நின்ற இடத்துக்கு எதிரிலேயே தேவகி இருந்த வண்டியும் நின்றது. ரயிலுக்கு வெளியே முகத்தை நீட்டி ஹெட்மாஸ்டரைப் பார்த்துக் கையை ஆட்டிய பெண் ணைப் பார்த்ததும் அவள்தான் தேவகி என்று எனக்குத் தெரிந்து விட்டது. கோண வகிடும் சுருட்டை மயிரும் குறு குறு வென்ற முகமும் கறுப்பான புருவமும் கண்ணிமையுமாகத் தோன் றிய தேவகியின் முகத்தை ரயில் சட் டங்களுக்கு நடுவில் அன்றைக்கு எப் படிப் பார்த்தேனோ, அப்படியே இன் றைக்கும் ஞாபகத்துக்கு வருகிறது. ''அப்பா! வந்துவிட்டேன்!'' என்று சொன்ன அவளுடைய குரலைக் கேட்ட தும் என் நெஞ்சு மேலெழுந்து தொண் டையை அடைத்தது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. ரயிலிலிருந்து தேவகி கீழே இறங்கியதும் எனக்கு என்ன தோன்றிற்று தெரியுமா?

''மாமி சுத்தப் பைத்தியம்! இப்படி ரம்பை, மேனகை யெல்லாம் தோற் றுப் போகும்படி அழகு படைத்த பெண்ணுக்குக் கலியாணம் ஆவதைப் பற்றியா கவலைப்படுவது? இவளுக்குப் படிப்பு இருந்தால்தான் கலியாணம் ஆகுமா? பத்தாயிரம், இருபதினாயி ரம் வரதட்சிணை இந்தப் பெண் ணுக்கா கொடுக்க வேண்டும்? பைத் தியக்காரத்தனந்தான்! இவளைக் கலி யாணம் செய்து கொள்ளுகிறவன் அல்லவா இவளைப் பெற்றவர்களுக் குப் பத்தாயிரம், இருபதினாயிரம் பணம் கொடுக்க வேண்டும்? அப்படிக் கொடுத்தாலும் அது இவளுக்கு ஈடா குமா!'' என்று இப்படி யெல்லாம் என் மனம் நினைத்தது.

ரயில்வே ஸ்டேஷனிலிருந்து வெளி யேறியபோது தேவகியின் பெட்டியை நான் தூக்கிக்கொண்டு போனேன். அப்படி அவளுடைய பெட்டியைத் தூக்கியது எனக்குப் பெருமையாயிருந் தது. ஜட்கா வண்டியில் முதலில் தேவகியை ஏறச் சொல்லிவிட்டு ஹெட்மாஸ்டர் ஏறிக் கொண்டார். பிறகு என்னையும் ஏறிக்கொள்ளச் சொன்னார். நான் தயக்கத்துடன் ஏறி உட்கார்ந்தேன். வண்டி நகரத் தொடங்கியதும் தேவகி, ''இவர் யார் அப்பா?'' என்றாள். அதுவரையில் யாருமே என்னைப் பற்றி அவ்விதம் மரியாதையாகப் பேசியதில்லை. எங்கள் ஊரில் சிறு பெண்கள்கூடப் புருஷப் பிள்ளைகளை 'அவன்' 'இவன்' என்று தான் சொல்வார்கள். தேவகி எனக்கு மரியாதை கொடுத்துப் பேசியது எனக்கு அளவில்லாத பெருமையையும் மகிழ்ச்சியையும் அளித்தது. பட்ட ணத்தில் வளர்ந்த பெண்களின் நாக ரிகம் எப்படியும் உயர்வுதான் என்று எண்ணிக் கொண்டேன்.

எப்போதும் சளசளவென்று பேசும் பழக்கம் உடைய எனக்கு அன்றைக்கு, அந்த ஜட்கா வண்டியில் போகும் போது, எதனாலோ பேசவே தோன்ற வில்லை. தகப்பனாரும் மகளும் பேசு வதைக் கேட்டுக்கொண்டு மௌனமா யிருந்தேன். நடுவில் ஒரு தடவை தேவகி ''இவருக்கு ரொம்ப சங்கோசம்போ லிருக்கிறது. பேசாமல் வருகிறாரே?'' என்றாள். ''அதெல்லாம் ஒன்றுமில்லை; அப்பாவும் பெண்ணும் பேசும்போது நடுவில் குறுக்கிட வேண்டாம் என்று இருக்கிறான். உன் அம்மாவுக்கு இவன் செல்லப் பிள்ளை. எதற்கெடுத்தாலும் 'கிச்சாமியை அனுப்புங்கள்!' என்

வருஷம் என் படிப்புத் தடைப்பட்டிருந்தது. ஆகையால் என் வகுப்பில் வாசித்த மற்றப் பிள்ளைகளைக் காட்டிலும் எனக்கு வயது அதிகம். பதினேழு முடிந்து பதினெட்டாவது பிறந்திருந்தது. ஆனால் பள்ளிக்கூடம் போகாத மூன்று வருஷமும் நான் சும்மா இருந்து விடவில்லை. நன்றாகப் படித்திருந்தேன். ஆகையால் இப்போது வகுப்பில் கெட்டிக்காரப் பையன் என்று பெயர் வாங்கியிருந்தேன். பள்ளிக்கூடத்தில் ஆசிரியர்கள் எல்லாரும் என்பேரில் பிரியமாயிருப்பார்கள். அந்த வருஷத்தில் புதிதாக வந்திருந்த ஹெட்மாஸ்டர் பத்மநாப ஐயங்காரும் என்னிடம் மிக்க அபிமானமாயிருந்தார். அவரைக் காட்டிலும் அவர் மனையாளுக்கு என்னிடம் பிரியம் அதிகம். அந்தத் தம்பதிகள் எங்கள் ஊருக்கு வந்த புதிதில் நான் அவர்களுக்கு மிக்க ஒத்தாசையாயிருந்தேன். புதுக் குடித்தனம் போடுவதற்கு வேண்டிய சாமான்கள் எல்லாம் வாங்கிக் கொண்டுவந்து கொடுத்தேன். இதிலிருந்து அந்த மாமிக்கு என்னை ரொம்பப் பிடித்துப் போய் விட்டது. தினசரி காலையில் பலகாரம் காப்பி எனக்கு ஹெட்மாஸ்டரின் வீட்டிலேதான். ஒரு நாளைக்கு நான் அவர்கள் வீட்டுக்குப் போகாவிட்டால், "கிட்டா! நேற்றைக்கு எங்கே காணோம்? இந்த மாதிரி நீ 'ஆப்ஸெண்ட்' போட்டால், ஹெட்மாஸ்டரிடம் சொல்லிப் பரீட்சையில் 'ஸைபர்' போட்டுவிடச் சொல்வேன்!" என்று மாமி சண்டை பிடிப்பாள். இப்படிச் சிலகாலம் ஹெட்மாஸ்டர் வீட்டுக்கு நான் செல்லப் பிள்ளையாயிருந்தேன். அவர்கள் வந்த புதிதில் அவர்களுடைய வீட்டில் அந்தத் தம்பதிகளைத் தவிர வேறு யாரும் இருக்கவில்லை.

பிறகு ஒருநாள் ரங்கநாயகி அம்மாள் திடீரென்று ஒரு செய்தி சொன்னாள். அவர்களுடைய குமாரி தேவகி அடுத்த வாரம் சென்னைப் பட்டணத்திலிருந்து வரப்போவதாகச் சொன்னாள். அது வரையில் அவர்களுக்கு ஒரு புதல்வி உண்டு என்னும் விஷயமே தெரியாமலிருந்தது. எனவே, அந்தச் செய்தியைக் கேட்டவுடன் எனக்கு வியப்பாயிருந்தது. வியப்பு மட்டுமில்லை; காரணம் சொல்ல முடியாத ஒரு பரபரப்பு உண்டாயிற்று. வரப்போகிற தேவகியைப் பற்றி எல்லா விவரங்களும் தெரிந்து கொள்ளவேண்டும் என்று தோன்றிற்று. மாமியிடம் சாதுர்யமாகப் பல கேள்விகள் கேட்டுத் தெரிந்து கொண்டேன். தேவகிக்கு வயது பதினைந்து; நாலாவது பாரம் பாஸ் செய்திருந்தாள். அவளை எங்கள் ஊருக்கு அழைத்துக் கொண்டுவர முதலில் பத்மநாப ஐயங்கார் இஷ்டப்படவில்லை. எங்கள் ஊர் பட்டணத்திலும் சேர்ந்ததில்லை; பட்டிக்காட்டிலும் சேர்ந்ததில்லை. இரண்டும் கெட்ட ஊர். பெண்களுக்குத் தனியாக ஹைஸ்கூல் கிடையாது. ஆண் பிள்ளைகள் ஹைஸ்கூல் மட்டுந்தானிருந்தது. ஆகையினாலே தேவகியின் படிப்பைக் கெடுக்கவேண்டாம் என்று பட்டணத்தில் பாட்டி வீட்டிலேயே அவளை விட்டு விட்டு வந்தார்கள். ஆனால் அதிக காலம் செல்லப் பெண்ணைப் பிரிந்திருப்பதற்குத் தாயார் தகப்பனார் இரண்டு பேராலும் முடியவில்லை. ஆகையால் சிலநாளைக்கெல்லாம் அவளை அழைத்துக் கொண்டு வரத் தீர்மானித்தார்கள். அழைத்துக் கொண்டுவந்து புருஷப் பிள்ளைகளின் ஹைஸ்கூலிலேயே சேர்த்து விடவும் முடிவு செய்தார்கள். ரங்கநாயகி அம்மாள் இதற்கு ஆட்சேபணைகள் பல சொல்லாமலில்லை. ஆனால் பத்மநாப ஐயங்கார், "நானே ஹெட்மாஸ்டராயிருக்கும்போது என்ன கவலை? என்னை மீறி என்ன நடந்து விடும்? கிணற்றுத் தண்ணீரை வெள்ளம் கொண்டுபோய் விடுமா? யாராவது ஏதாவது உளறிக்கொண்டு போகட்டும். இந்தக் காலத்தில் வைதிக குடும்பத்துப் பெண்கள் சாதி விட்டுச் சாதி கலியாணம் செய்து கொள்கிறார்கள். கப்பலேறிச் சீமைக்குப் போகிறார்கள். வக்கீல் பரீட்சை பாஸ் செய்துவிட்டு நாலு கைச் சட்டை போட்டுக் கொண்டு கோர்ட்டில் வந்து பேசுகிறார்கள். அவர்களையெல்லாம் யார் தள்ளிவைத்து விட்டார்கள்? என் பெண் என் பள்ளிக்கூடத்தில் சேர்ந்து படிப்பதற்கு என்ன வந்து விட்டது?" என்று அடித்துப் பேசினார்.

அதன்பேரில் ரங்கநாயகி அம்மாளும் சம்மதித்தாள். எங்கள் ஹெட்மாஸ்டரின் மனைவி கொஞ்சம் உலகப்



போக்கை அறிந்த பெண்மணி. தன் புதல்வி ஆறாவது பாரம் வரையிலாவது படித்தால்தான் நல்ல இடத்தில் கலியாணம் ஆகும் என்ற எண்ணம் அந்த அம்மாளின் மனதில் இருந்தது.

"நீயே சொல்லு, கிட்டா! இவருக்கோ மாதம் சம்பளம் நூற்றைம்பது ரூபாய். காப்பிச் செலவுக்கே ஐம்பது ரூபாய் ஆகிவிடுகிறது. இந்த இலட்சணத்தில் பணங் காசு எப்படிச் சேரும்? பத்தாயிரம், இருபதினாயிரம் என்று வரதட்சிணை கொடுத்துக் கலியாணம் பண்ணிக் கொடுக்க நமக்கு யோக்யதை உண்டா? குழந்தைக்குக் கொஞ்சம் படிப்பாவது இருந்தால்தானே, சுமாராக நல்ல இடமாகப் பார்த்துக் கலியாணம் செய்து கொடுக்கலாம்?" என்று ரங்கநாயகி அம்மாள் என்னிடம் சொன்னதற்கு நான் ஒன்றும் பதில் சொல்லவில்லை. அந்த விஷயமாக என் மனதில் அச் சமயம் அபிப்பிராயம் ஒன்றும் ஏற்பட்டிருக்கவில்லை. ஆனால் மாமிக்கு யாரிடமாவது தன் மனதிலிருந்ததைச் சொல்லித் தீர்க்க வேண்டியதாயிருந்தது. ஆகையால் என்னைப் பிடித்துக்கொண்டாள்.

"என்னடா, கிட்டா! ஒன்றும் பதில் சொல்லாமல் வாயை மூடிக்கொண்டிருக்கிறாயே? உன் அபிப்பிராயம் என்ன? தேவகியின் படிப்பை நிறுத்த எனக்கும் இஷ்டமில்லைதான். ஆனால் இந்த ஊர் கொஞ்சம் பட்டிக்காடாயிருக்கிறதே என்று பார்க்கிறேன். புருஷப் பிள்ளைகள் படிக்கும் வகுப்பிலேயே தேவகியையும் உட்கார்ந்து படிக்கச் சொன்னால், இந்த ஊர்க்காரர்கள் ஏதாவது வம்பு வளர்க்க மாட்டார்களா?" என்று ரங்கநாயகி அம்மாள் மறுபடியும் வற்புறுத்திக் கேட்டாள்.

"நீங்கள் எதற்காகக் கவலைப்படுகிறீர்கள், மாமி! ஹெட்மாஸ்டருக்குத் தெரியாத விஷயமா! அவர் செய்யும் ஏற்பாடு சரியாகத்தான் இருக்கும்" என்று நான் சொல்லி வைத்தேன்.

"என்னதான் அவர் எல்லாம் தெரிந்தவராயிருந்தாலும், இந்த விஷயம் நன்றாய் யோசித்துச் செய்ய வேண்டிய காரியம் அல்லவா? எந்தப் பக்கம் பார்த்தாலும் தர்ம சங்கடமாயிருக்கிறது. எனக்கும் சரி, அவருக்கும் சரி, குழந்தையை விட்டு விட்டுப் பிரிந்திருக்க முடியவில்லை. தூங்குவதற்குக் கண்ணை மூடினால் தேவகிதான் கனவிலே வந்து நிற்கிறான். எங்கள் விஷயந்தான் இப்படி என்



அவன் என்னைப் பார்த்துப் பிரமித்து நின்றதிலிருந்து தெரிந்தது. அவள் கையைப் பிடித்துக் கொண்டு வந்த குழந்தை அவளைப் பிடித்து இழுத்ததைக்கூடக் கவனியாமலே நின்றாள்.

என் மனக் கொந்தளிப்பை ஒருவாறு சமாளித்துக்கொண்டு, "ஹெட்மாஸ்டர் பெண் தேவகிதானே?" என்று நாத்தழுதழுக்கக் கேட்டேன்.

"ஆமாம்; நீங்கள் கிட்டாதானே?" என்றாள் தேவகி.

"ஓகோ! இன்னும் என்னை ஞாபகம் வைத்திருக்கிறாயே?" என்றேன்.

"எப்படி மறக்க முடியும்?......என்றைக்காவது ஒரு நாள் உங்களைச் சந்திப்போம் என்கிற நம்பிக்கை என் மனதில் இருந்தது. அந்த நம்பிக்கை இப்போது நிறைவேறி விட்டது!" என்று தேவகி கனிவுடன் கூறினாள்.

"அப்படியா? என்னைச் சந்திக்கும் விருப்பம்கூட உனக்கு இருந்ததா? அது என்னுடைய பாக்கியந்தான்!... இந்தச் சென்னைப் பட்டணத்தில்தான் நீ இருக்கிறாயா? ஜாகை எங்கே?... உன்னுடைய கணவர் ...... இந்தக் குழந்தைகளின் தகப்பனார் ...... அவர் இங்கே வரவில்லையா?" என்று தயங்கித் தயங்கிக் கேட்டேன்.

"வீட்டுக்கு வாருங்கள்! எல்லாக் கதையும் சாவகாசமாகச் சொல்கிறேன்!" என்று தேவகி கூறிய வார்த்தைகளிலேயே கண்ணீர் கலந்திருந்ததாகத் தோன்றியது.

அவளுடைய வீட்டு விலாசத்தைத் தெரிந்து கொண்டேன். பிறகு பிரிய மனமின்றிப் பிரிந்து சென்றேன்.

அடுத்த ஞாயிற்றுக்கிழமை காலையில் வீட்டுக்கு வரும்படி தேவகி சொல்லியிருந்தாள். அதுவரையில் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு யுகமாகச் சென்று கொண்டிருந்தது.

அந்த நீண்ட யுகங்களையெல்லாம் பழைய சம்பவங்களை ஒவ்வொன்றாக நினைவுப்படுத்திக்கொண்டு கழித்தேன்.

2

ஏறக் குறைய கால் நூற்றாண்டுக்கு முன்னால் நடந்த சம்பவம். ஆனாலும் நேற்று நடந்ததுபோல் என் ஞாபகத்தில் இருக்கிறது. ஹைஸ்கூலில் ஆறாவது பாரம் படித்துக் கொண்டிருந்தேன். என் தகப்பனாரின் மரணம் காரணமாக நடுவில் மூன்று

# தேவகியின் கணவன்

## கல்கி

சந்திரா

தேனாம்பேட்டை காங்கிரஸ் மைதானத்தில் ஆண்டு தோறும் சுதேசிப் பொருட் காட்சி நடத்துகிறவர்களை வாழ்த்துகிறேன். அந்தப்பொருட் காட்சி காரணமாக என் வாழ்க்கையில் வெகு காலமாய் மர்மமாக இருந்து வந்த ஒரு விஷயம் துலங்கியது. என் மனதில் சுமந்திருந்த ஒரு பெரிய பாரம் நீங்கியது. அடிக்கடி என்னைச் சிந்தனையில் ஆழ்த்தி என் நிம்மதியைக் குலைத்து வந்த ஒரு சந்தேகம் நிவர்த்தியாகி என்னுடைய உள்ளத்தில் அமைதி ஏற்பட்டது.

இந்த வருஷத்துச் சுதேசிப் பொருட் காட்சிக்கு நான் போகவில்லை. சென்ற வருஷத்தைக் காட்டிலும் இந்த வருஷம் எவ்வளவோ சிறப்பான ஏற்பாடுகள் செய்திருப்பதாக எல்லாரும் சொன்னார்கள். ஆனாலும் நான் போகவில்லை. போகலாமா, வேண்டாமா என்று யோசனை செய்து, வேண்டாம் என்று முடிவு கட்டினேன். போயிருந்தால், அங்கே நான் தேவகியைச் சந்தித்த இடத்துக்கு என் கால்கள் என்னை இழுத்துக்கொண்டு போயிருக்கும். பழைய ஞாபகங்களில் மூழ்கிப் போயிருப்பேன். எல்லாரும் பார்க்கும் காட்சிகளில் என் மனம் சென்றிராது. ஆடல் பாடல்களிலோ நாடகம் நடனங்களிலோ நான் எவ்விதம் கருத்தைச் செலுத்த முடியும்? சித்திரக் காட்சிக்குள் சென்றால், தேவகியின் சித்திரம்தான் என் மனக் கண்முன்னால் தோன்றும். மின்சார சக்தியின் அற்புதங்களைக் காட்டும் இடத்துக்குள் சென்றால், அங்கே திடீரென்று தேவகியை நான் பார்த்த உடனே என் உடம்பில் பாய்ந்து குலுக்கிப் போட்ட மின்சார சக்தியைத்தான் நினைத்துக் கொள்வேன்.

ஒரு வருஷமா? இரண்டு வருஷமா? இருபத்தைந்து வருஷத்துக்குப் பிறகு அவளை நான் பார்த்தேன். கன்னிப் பெண்ணாகத் துள்ளித் திரிந்துகொண்டிருந்தவளை மூன்று குழந்தைகளின் தாயாராகப் பார்த்தேன். ஆயினும், பார்த்த தட்சணமே அடையாளம் தெரிந்து போய்விட்டது. கொஞ்சநஞ்சம் சந்தேகம் இருந்தாலும், செக்கச் சிவந்த அவள் கன்னத்தில், காதின் ஓரத்தில் இருந்த அழகிய மச்சம் அந்தச் சந்தேகத்தைப் போக்கி விட்டது.

தேவகியும் என்னை அடையாளம் தெரிந்து கொண்டு விட்டாள் என்பது

தமிழ்நாட்டில் சில காலமாகச் சமூகப் படங்களுக்கு யோகம்பிறந்திருக்கிறது. இந்தச் சமயத்தில், சென்ற வருஷம் "வேலைக்காரி" என்னும் பிரமாதமானசமூகப் படத்தை வெளியிட்ட ஜூபிடர் பிக்சர்ஸார் "கிருஷ்ண விஜயம்" என்ற புராண படத்தைத் துணிவுடன் தயாரித்து வெளியிட்டிருக்கிறார்கள். படத்தில் ஏராளமான தந்திரக் காட்சிகளைக் கையாண்டு ஜன ரஞ்சகமாகச் செய்திருக்கின்றனர். இந்தப் படத்தில் லலிதா - பத்மினி என்ற இரு நடன நட்சத்திரங்கள் கோபிகாஸ்திரீகளாகவும் வேறு பல வேடங்களிலும் தோன்றி மக்களை மகிழ்விக்கின்றனர். கம்சனாகத் தோன்றும் ஸ்ரீ ஆர். பாலசுப்பிரமணியம் படம் பூராவும் "போடு" போடென்று போட்டிருக்கிறார்.



பட்டுவந்தது. ஆகவே அவர் தானம் போட்டுக் காட்டாமலேயே அநேக சமயங்களில் நிரவல் செய்த போதிலும் ராகமும் தானமும் இணைபிரியாது விளங்கியதால் அந்த சம்பிரதாய முறையை வித்துவான்கள் கண்டு மகிழ்ந்தார்கள். ஸ்வரம் பாடும்போது இவருடைய மனோ தர்மமானது எல்லையற்றதாய் விளங்கும். அபூர்வமான ராகங்களில் இவர் பாடும் இரண்டாவர்த்தம் அல்லது காலாவர்த்தக் கண்டிகைகள் ஒவ்வொன்றும், மற்றவர்களால் வெகுகாலம் பாடுபட்டு அமைக்கப்பட்ட உயர்ந்த சிட்டஸ்வரங்களுக்குச் சமமாகவே விளங்கியபடியால் நமது டைகர் அவர்களின் மனோதர்மத்தில் மயங்காத வித்துவான்களே இல்லை. கர்நாடக சங்கீதத்தின் அடிப்படையான ராகம், தானம், பல்லவி, இவைகளைச் சம்பிரதாய முறை வழுவாத சஞ்சாரக் கிரமங்களுடனும் எல்லையற்ற மனோ தர்மத்துடனும் சுருதி லயமுறைகளிலிருந்து வழுவாமலும் போஷித்து இவர் பாடியதால் அந்தச் சங்கீதத்தின் கௌரவத்தை வித்துவான்கள் உணர்ந்து ஆனந்தித்தார்கள்.

இவ்வளவு கலா ரஸனை மிகுந்த நமது டைகர் அவர்களின் கச்சேரிகள் வித்துவான்களின் உள்ளங்களைக் கொள்ளை கொண்டன. வித்துவான்கள் பாராட்டியனுபவிப்பதை மதித்த சில ரசிகர்களும் டைகர் அவர்களைக் கௌரவிக்க முன் வந்தனர். அப்படிப்பட்டவர்களில் முக்கியமாய், காலஞ் சென்ற நமது தலைவர் எஸ். சத்தியமூர்த்தி அவர்களைக் குறிப்பிடலாம்.

சென்னையில் சங்கீத வித்வத் சபை நிறுவப்பட்டதிலிருந்து டைகர் அவர்களின் கௌரவம் பிரகாசிக்க ஆரம்பித்தது. சம்ஸ்க்ருதம், தெலுங்கு, ஆங்கிலம் ஆகிய பாஷைகளிலும் இவருக்கு நல்ல பரிச்சயம் இருந்தபடியால் சங்கீத லக்ஷண லக்ஷியங்களை நன்கறிந்திருந்தார். ஆகவே 1932-ம் ஆண்டில் நடந்த சங்கீத வித்வத் சபையில் இவரை அக்ராஸனம் வகிக்கச் செய்து சங்கீத கலாநிதி என்ற பட்டத்தை வழங்கினார்கள். பிறகு வித்வத் சபையோரால் நடத்தப்படும், சங்கீத ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் முதல் தலைமைப் பேராசிரியராகப் பதவி பெற்று டைகரவர்கள் சேவை புரிந்தார். பின்னர் சென்னை சர்வகலாசாலையின் சங்கீத இலாகாவுக்குத் தலைமை ஆசிரியர் பதவியை ஏற்றார். அதன் பிறகு அண்ணாமலை சர்வகலாசாலை சங்கீதக் கல்லூரியின் தலைமைப் பதவியை வகிக்கச் சிதம்பரத்திற்கு அழைக்கப்பட்டார். அங்கு சில வருஷங்கள் தொண்டாற்றிய பிறகு ஓய்வு எடுத்துக் கொள்ள எண்ணினார். ஆனால் ரசிகர்கள் இவரை விடுவதாயில்லை. அடையாறு கலா க்ஷேத்திரத்தில் சங்கீத சிரோமணி வகுப்புக்குத் தலைமையாசிரியராக இருக்கும்படி கேட்டுக் கொண்டார்கள்.

மைசூர் மகாராஜா அவர்கள் நமது டைகர் வரதாச்சாரியாரின் சங்கீதத்தில் பெரிதும் ஈடுபட்டு விசேஷமான சன்மானங்களைச் செய்ததுடன் "சங்கீத சாஸ்திர விசாரத" என்ற பட்டத்தையும் சூட்டி ஆஸ்தான வித்வானாக நியமித்தார். இப்படியாக ஆதியில் கலைக்காகவே கலைத்தொண்டு புரிந்த இந்த வித்துவானைப் பெயரும், புகழும், பணமும், பட்டமும், பதவியும் பிற்காலத்தில் கைகட்டி நின்று முற்றுகையிட்டன.

சுபாவத்தில் இவர் பரம சாது. வித்துவான்கள் முதல் மாணவர்கள் வரையிலும், பண்டிதர் முதல் பாமரர்கள் வரையிலும், பணக்காரர்கள் முதல் ஏழைகள் வரையிலுமுள்ள எல்லோருடனும் அன்புடன் பழகுவார். பொதுவாகச் சபைகளிலும் வித்துவத் சபையாரின் கூட்டங்களில் நடக்கும் சர்ச்சைகளிலும் இவர் கலந்து கொள்ளும் போது எல்லோருக்கும் அளாதியான உற்சாகம் ஏற்படுவது சகஜம். தன்னுடைய அபிப்பிராயங்களை மற்றவர் மனம் கோணாமலும் வேடிக்கையாகவும் கவர்ச்சியாகவும் திறமையாகவும் பேசி, ஒப்புக் கொள்ளும்படி செய்வதில் இவர் சமர்த்தர். இவர் தலைமை வகித்த கலா ஸ்தாபனங்களில் உள்ள மாணவர்களின் மனதையும் மரியாதையையும் ஒருங்கே கவர்ந்திருக்கிறார். சிஷ்யர்களுக்கு அலுப்பு ஏற்படாமலும் முறை வழுவாமலும் அன்பாக ஆதரித்துப் போதிப்பதில் இவர் நிகரற்றவர். இவரைப் போல் எல்லா வழியிலும் நல்ல பாண்டித்யமும் நல்ல செல்வாக்கும் வாய்ந்த மற்றொரு வித்துவானை இனிக் காண்பது அரிது.

சிறிது காலமாய் உடல் நலம் குன்றியிருந்த போதிலும் கடைசி காலத்தில் ஆண்டவன் அழைப்பு வந்துவிட்டதைத் தாம் உணர்ந்து உடனிருந்தவர்களுக்கும் தெரிவித்து நிஷ்காம்ய பக்தியுடன் நாதப்பிரம்மத்தில் மனதை ஈடுபடுத்தினார். அதற்கனுகூலமாகத் தம் சிஷ்யரைப் பாடிக் கொண்டிருக்கக் கட்டளையிட்டார். அந்தக் கானத்தைக் கேட்டுக்கொண்டே அனாயாசமாய் நாதப்பிரம்மத்தில் ஐக்கியமடைந்த அவருடைய புனித ஆத்மா சாந்தி யடைவதாக.

# கானப் புலி மறைந்தது!


"அதை அப்படியும்
சொல்லலாம்
இப்படியும் சொல்லலாம்!"
சிஷ்யர்:- நானும் வரலாமா?
டைகர்: புலி சென்றிடில்
வாலும்தான் கூட வரும்.

# டைகர் வரதாச்சாரியார்

கோட்டுவாத்தியம் – ஸ்ரீ துரையப்ப பாகவதர்

பிரபல கர்நாடக சங்கீத வித்துவான் டைகர் வரதாச்சாரியார் அவர்கள் கலைக்காகவே கலையைப் பயின்று தொண்டாற்றிய கலைஞர்களின் முன்னணியில் பிரகாசித்து வந்தார். பொதுவாக இம்மாதிரி கலைஞர்கள் பணம், பெயர், புகழ் எதையும் விரும்பாமல் கலையில் உள்ள ருசி, பெருமை, ஆர்வம் இவைகளுக்காகவே தங்கள் வாழ்நாட்களை அர்ப்பணம் செய்வார்கள். ஆனால் மற்றக் கலைஞர்களுக்கு எளிதில் கிடைக்காத பெயர், புகழ் முதலானவையெல்லாம் இவர்களைத் தாமாகவே தேடிக் கொண்டு வருகின்றன என்பது அனுபவத்தில் கண்ட விஷயம்.

எழுபத்து நாலாவது வயதில் காலமடைந்த இந்த வித்துவானுடைய முழு யோக்கியதையை சுமார் முப்பது வருஷங்களுக்கு முன்தான் பொது ஜனங்கள் அறிய ஆரம்பித்தார்கள். என்றாலும் பிரமுகர்களாகிய எல்லா சங்கீத வித்துவான்களும் இவருடைய யோக்கியதையை நன்கு அறிந்திருந்தபடியால் ஆதி முதல் இவர் வித்துவான்களால் போற்றப்படும் மகா வித்துவானாக விளங்கி வந்தார்.

அந்தக் காலத்தில் சங்கீத உலகத்தில் சிம்மங்களாய் விளங்கிய பட்டணம் சுப்பிரமணிய அய்யர், கோயமுத்தூர் ராகவய்யர் போன்ற வித்துவான்களின் சங்கீதத்தில் பெரிதும் ஈடுபட்டுப் பயின்று நிற்பன்னராகும் பாக்கியம் இவருக்குக் கிடைத்திருந்தபடியால் அந்த முறையில் சம்பிரதாயமான சங்கீதத்தைப் பிராபல்யப் படுத்த வேண்டும் என்ற அவாவும், ஆர்வமும் இவருக்கு ஆதியிலிருந்தே இருந்து வந்தது. ஆரம்ப காலத்தில் எவ்வளவோ சோதனைக்குள்ளாக நேர்ந்தும் தனது உயர்ந்த நோக்கத்தை அவர் எக்காரணத்தைக் கொண்டும் மாற்ற எண்ணியதில்லை.

கலையின் முன்னேற்றம் இம்மாதிரியான இலக்ஷிய புருஷர்களின் கையில்தான் இருக்கிறது.

பெரிய வித்துவான்களிடம், சிறந்த குருகுலவாச முறையில் சம்பிரதாய சங்கீதத்தைச் சிரத்தையுடன் பயின்று அதைக் காப்பாற்றித் தாமும் அனுபவித்ததுடன் அவ்வப்போது சங்கீத உலகில் ஏற்பட்ட புரட்சிகளிலிருந்து அந்தச் சம்பிரதாய முறையைக் காப்பாற்றி வந்த பெரியோர்களில் நமது டைகர் அவர்களும் ஒருவர். ஆகவே அந்தக் காலத்திய வித்துவான்களின் சம்பிரதாயத் தொடர்பு இவருடைய பிரிவால் அற்றுவிட்டது என்பது மிகையாகாது.

சுமார் 25 வருஷங்களுக்குமுன் திருவையாறு ஸ்ரீ தியாகப்பிரம்ம உற்சவத்தில் முதன் முதலில் நமது டைகர் அவர்களின் கச்சேரி நடந்தபோது காலஞ்சென்ற பிடில் கோவிந்தசாமிப் பிள்ளையவர்கள் பக்திசிரத்தையுடன் நின்று கொண்டே இவருடைய சங்கீதத்தை அனுபவித்துப் பாராட்டிப் பரமானந்தமடைந்தார். காஞ்சீபுரம் நாயினாப் பிள்ளையவர்களும் தம் வீட்டில் நடத்திய ஸ்ரீ தியாகப்பிரம்ம உற்சவத்தில் டைகர் அவர்களின் சங்கீதத்தை மனமுருகி அனுபவித்ததுடன் அவ்வப்போது சில அபூர்வ ராகங்களையும் கீர்த்தனைகளையும் பாடும்படி கேட்டுக் கொள்வார். இவருடைய கச்சேரிகளை, உள்ளபடி அறிந்து ஆனந்தித்துப் பரிமளிக்கச் செய்யும் ஆற்றல், முதிர்ந்த ஞானமும் அனுபவமும் உள்ள சில பக்கவாத்திய வித்துவான்களுக்கு இருந்தது.

இவர் பாடிய சௌக்க கால வர்ணங்கள் ராக பாவத்துடனும், காலப் பிரமாண சுத்தத்துடனும், அந்தந்த ராகங்களின் பூர்ணமான எழிலுடனும் விளங்கின. கன ராகங்களையும் அபூர்வ ராகங்களையும் இவர் அநாயாசமாய் ஆலாபனம் செய்து மெய்ப்பித்து சம்பிரதாயமான முறையில் பாடும்போது வித்துவான்களுக்கு உடல் சிலிர்க்கும். கீர்த்தனங்களைப் பிராசீன பாடாந்திரம், பத்ததி, இவைகளிலிருந்து வழுவாமல் போஷித்துப் பாடியதால் இவருடைய ஒவ்வொரு கீர்த்தனையும் ஒரு சம்பிரதாய பொக்கிஷமாக விளங்கிற்று. கீர்த்தனைகளில் நிரவல் செய்யும்போது தாளத்திற்கு அதிகப் பிராதான்யம் கொடுத்துத் தாளத்தை ஓங்கியடித்து ராகங்களின் எழில்களை இவர் குறைக்க முற்படுவதில்லை. அதே மாதிரி ராக பாவங்களை விசேஷமாகப் பிரகடனப்படுத்த எண்ணிக் காலப் பிரமாணத்திலிருந்து நழுவியதுமில்லை. இதனால் இவருடைய நிரவல்களில் ராகபாவம், தாள வின்யாஸம் இவைகள் இரண்டிற்கும் சமமான அந்தஸ்து அளிக்கப்

முருகன் டாக்கீஸாரின்

# ரத்னகுமார்





பிப்ரவரி 10 முதல்

## பிரபாத் சித்ரா

தினசரி 3 காட்சிகள்

BALU BROS

முருகன் டாக்கி பிலிம் கம்பெனி, MTF மதுரை.

எனினும் சமீபத்தில் நியூஸிலந்திலும் ஆஸ்திரேலியாவிலும் நடந்த தேர்தல்களில் அதிகாரத்தில் இருந்த தொழிற்கட்சிகள் எதிர்பாராதவாறு தோல்வியுற்றது பிரிட்டனிலும் நிலைமை என்ன ஆகுமோ என்ற கவலையைக் கொடுத்திருக்கிறதாம்.

மேற்படி தேசங்களில் தொழிற்கட்சி சர்க்கார்கள் வேலையில்லாக் கஷ்டத்தை அறவே ஒழித்ததுடன் பல முக்கிய தொழில்களையும் சர்க்கார் நிர்வாகத்தில் ஏற்று நடத்த ஆரம்பித்தார்கள். அப்படியிருந்தும் அவர்கள் தோல்வியுற்றது அரசியல் ஜோஸ்யர்களைத் திகைக்க வைத்து விட்டது.

ஏன்? அமெரிக்க ஜனாதிபதி தேர்தலில் ட்ருமன் வெற்றி பெறவே மாட்டார் என்று சகல பத்திரிகைகளும் சகல அரசியல் ஜோஸ்யர்களும் சத்தியம் செய்தது இறுதியில் பொய்த்துப் போய் விடவில்லையா?

போதாக்குறைக்கு, பிரிட்டிஷ் பார்லிமெண்டில் பத்து ஸ்தானங்களே உள்ள லிபரல் கட்சியினர் நானூறுக்கு மேற்பட்ட அபேட்சகர்களை நிறுத்தியிருப்பதால் வோட்டுக்கள் மூன்று கட்சி அபேட்சகர்களிடையே சிதறலாம் என்றும் அபிப்பிராயம் நிலவி வருகிறது.

* * *

இந்தச் சந்தர்ப்பத்திலே ஒரு முக்கியமான விஷயத்தை பிரிட்டிஷ் மக்கள் மறக்க முடியாது. இந்தியா முதலிய ஆசியா நாடுகளிலுள்ள மக்களும் மறக்கவே முடியாது.

சென்ற மகாயுத்தத்துக்குப் பிறகு பிரிட்டனில் ஏற்பட்ட பொருளாதார நெருக்கடியைத் தொழிற்கட்சி சர்க்கார் வெற்றிகரமாகச் சமாளித்தனர். அது பிரிட்டிஷ் ஜனங்களைப் பொறுத்தது.

ஆனால், இந்தியா, பர்மா, இலங்கை இந்த நாடுகளுக்கு பிரிட்டிஷ் தொழிற்கட்சி சர்க்கார் சுதந்திரம் அளித்தது பிரிட்டனுடைய கௌரவத்தை உயர்த்தியதோடு, உலக சரித்திரத்திலும் பிரிட்டனுக்கு மகோன்னதமான ஸ்தானத்தை அளித்திருக்கிறது.

எனவே, இந்தியா முதலிய மேற்படி நாடுகள் சம்பந்தப்பட்ட வரையில் அவைகள் மீண்டும் தொழிற்கட்சி சர்க்கார் அதிகாரத்துக்கு வருவதையே விரும்புகின்றன.

பேனும், வருங்காலத்தில் உலகம் முழுதும் தொழிலாளரே அதிக செல்வாக்கும் அரசியல் உரிமைகளும் பெற்று விளங்குவராதலால், இனி கன்சர்வேடிவ் கட்சியைப் போன்ற பிற்போக்கான முதலாளிகளின் கட்சிக்கு இடம் இல்லை என்று சொல்லிவிடலாம்.

சென்ற மகாயுத்தத்தில் எல்லாக் கட்சிகளையும் சேர்ந்த கூட்டு மந்திரி சபையே பிரிட்டனில் இருந்தது. எனவே, பிரிட்டனின் வெற்றியில் கன்சர்வேடிவ் கட்சியினர் ஏக போகமான பங்கு கோர முடியாது.

ஆனால், கன்சர்வேடிவ் கட்சியினர் எவ்வளவோ எதிர்த்தும்கூட தொழிற்கட்சி சர்க்கார் துணிந்து இந்தியா முதலிய நாடுகளுக்குச் சுதந்திரமும் சமத்துவமும் அளித்து பிரிட்டனுக்கு உலகம் உள்ளளவும் பெருமையைத் தேடிக் கொண்டார்கள்; சிறந்த அரசியல் தர்மமான ஜனநாயகத்துக்கு ஆக்கம் அளித்தார்கள்.

எனவே கன்சர்வேடிவ் கட்சியோ, லிபரல் கட்சியோ, அல்லது மற்றச் சில்லறைக் கட்சிகளோ எவ்வளவு பிரசாரம் செய்தாலும் தராசின் தொழிற்கட்சிப் பக்கம் பளுவாகத்தான் இருக்கும்; அதைச் சமநிலைக்குக் கொண்டு வருவது முடியாத காரியம்!

## அட்டைப்பட விளக்கம்

'கல்கி' நேயர்கள் தொடர்ந்து படித்துவரும் சுவாரஸ்யமான கதை சித்திரலேகாவிலிருந்து ஒரு காட்சி. இன்ப வாழ்க்கையையே இலட்சியமாகக் கொண்டிருந்த சித்திரலேகா யோகி குமாரகிரியின் தேஜஸும் தவ வலிமையும் பொருந்திய கம்பீரமான உருவத்தைக் கண்டு மையல் கொண்டாள். கடைசியில் தன் சுகபோக வாழ்க்கையைத் துறந்து தவ வாழ்க்கையை மேற்கொள்வது என்று முடிவு செய்தாள். தன் தீர்மானத்தின்படி, தன் காதலன் பீஜகுப்தனுக்குக் கடிதம் எழுதி வைத்துவிட்டுக் குமாரகிரியின் குடிசையைத் தவக்கோலத்துடன் அடைகிறாள். கடிதத்தைக் கண்ட பீஜகுப்தனுக்குச் சித்திரலேகாவை மறப்பது சிரம சாத்தியமான காரியமாகப்பட்டது. அவனுடைய பிரிவுத் துயரைத் தாளாமல் அவனும் குமாரகிரியின் குடிசையை அடைகிறான். பீஜகுப்தனும் சித்திரலேகாவும் சந்திக்கும் காட்சிதான் இந்த இதழின் அட்டைப் படமாகத் திகழ்கிறது.

உலகத்தையே சின்ன பின்னமாக்கி நாசம் செய்யக்கூடிய அணுகுண்டுக்கும் அண்ணனாக இருக்கும்.—அணுகுண்டைக் காட்டிலும் ஆயிரம் பதினாயிரம் மடங்கு சக்தி பொருந்திய ஹைட்ரஜன் குண்டு சிருஷ்டியாகி வருகிறது அல்லவா? அதிலிருந்து உலகத்துக்குப் பாதுகாப்பு அளிக்க வேண்டும் என்றும் அவர்கள் ஆண்டவனைப் பிரார்த்தனை செய்தார்கள்.

"இப்போது அதிகாரத்தை நாடுவோர் மகத்தான பொறுப்பை வகிக்க வேண்டியவர்கள் ஆவார்கள். இந்தத் தேசத்தில் சுபிட்சத்தையும் சுதந்திரத்தையும் தெய்வ நம்பிக்கையையும் நிலை நிறுத்தி, உலகத்தின் அமைதிக்காகவும் ஆரோக்கியத்துக்காகவும் பாடுபட வேண்டிய பயங்கரமான சுமையை அவர்கள் வகிக்கத் தயாராயிருக்க வேண்டும்" என்று காண்டர்பரி ஆர்ச்பிஷப் அப்போது குறிப்பிட்டார்.

மேற்படி வார்த்தைகள் பிரிட்டன் விஷயத்தில் மாத்திரமல்ல, இந்தியா விஷயத்திலும், உலக நாடுகளின் விஷயத்திலும் முற்றிலும் பொருந்தும்.

ஹிரண்ய கசிபுவின் அண்ணன் ஹிரண்யாக்ஷன் பூமியைப் பாயாகச் சுருட்டி ஒளித்து வைத்தபோது இறைவன் வராஹாவதாரம் எடுத்துப் பூமியைக் காப்பாற்றியதாக நமது பண்டைய புராணங்கள் கூறுகின்றன.

ஹிரண்யாக்ஷன் பூமியை ஒளித்து வைத்தானேயன்றி அது மீண்டும் உய்ய முடியாதவாறு அதற்கு எவ்வித ஆபத்தும் விளைவிக்க வில்லை.

ஆனால், அணு குண்டுக்கு அண்ணனான ஹைட்ரஜன் குண்டு எப்படியென்றால் உலகத்தையே ஆண்டவனும் உய்விக்க முடியாதவாறு சில விநாடிகளில் சர்வ நாசம் செய்துவிடும் என்று கூறப்படுகிறது!

அணு குண்டைக் காட்டிலும் அகோர சக்தி பொருந்திய ஹைட்ரஜன் குண்டைச் சிருஷ்டி செய்யத் தாம் உத்தரவு கொடுத்து விட்டதாக ஜனாதிபதி ட்ரூமன் பெருமை அடைகிறார்.

ஹைட்ரஜன் குண்டைக் காட்டிலும் மகா கொடிய குண்டை உற்பத்தி செய்யும் இரகசியத்தை ருஷ்யா கண்டு பிடித்து விட்டதாகப் பிரபல ஜெர்மன் விஞ்ஞானி எச்சரிக்கிறார்.

கூடிய சீக்கிரம் ருஷ்யாவில் ஹைட்ரஜன் குண்டு வெடிப் பரீட்சைகள் நடைபெறலாம் என்றுகூட ஒரு செய்தி அப்பட்டமாகக் கூறுகிறது!

இந்த நிலையில், "அணுகுண்டுக்கு அண்ணன் வருகிறான்! ஆண்டவன் எங்கே?" என்று பிரிட்டிஷ் ராஜ தந்திரிகள் பீதியடைந்து கிறிஸ்துவாலயத்தில் தவம் புரிய முற்பட்டதில் ஆச்சரியம் என்ன இருக்கிறது? நிற்க.

* * *

"தலையில்லாமல் வால் ஆடுகிறது; வால் இல்லாமல் தலை ஆடுகிறது" என்று சில வருஷங்களுக்கு முன் பிரிட்டனில் அரசியல் பிரமுகர்கள் வேடிக்கையாகச் சொல்லி வந்தார்கள்.

அப்போது தொழிற் கட்சியில் தகுந்த தலைவர்கள் இல்லை, சீடர்கள் தான் ஏராளமாக இருந்தார்கள். லிபரல் கட்சியில் தகுந்த தலைவர்கள் இருந்தார்கள், சீடர்களைக் காணவில்லை.

இரண்டாவது மகா யுத்தத்துக்குப் பின் பிரதம மந்திரி சர்ச்சிலின் கட்சி தோல்வியுற்றது போல, முதலாவது மகாயுத்தத்துக்குப் பின் பிரதம மந்திரி லாயிட் ஜார்ஜின் கட்சி தோல்வியுற்றது. அதன்பின் அந்தக் கட்சியின் நிலைமை கழுதை தேய்ந்து கட்டெறும்பு ஆன கதையாக முடிந்தது. தொழிற்கட்சித் தலைவர்களான ராம்சே மெக்டொனால்டு, ஸ்னோடன் முதலிய பிரமுகர்கள் பட்டம் பதவிகளில் மோகம் கொண்டதால், அந்தக் கட்சியின் தலைமை சிதறுண்டு போயிற்று.

எனினும், சென்ற மகாயுத்தத்துக்குப் பின் தொழிற் கட்சியில் கன்சர்வேடிவ் கட்சிப் பிரமுகர்களையும் ஒரு கை பார்க்கக் கூடிய தலைவர்கள் ஏற்பட்டு விட்டார்கள்.

சென்ற தேர்தலில் அவர்கள் மகத்தான வெற்றிபெற்றுப் பிற கட்சிகளின் உதவியை நாடவேண்டிய அவசியம் இராதவாறு அபரிமிதமான ஸ்தானங்களையும் அடைந்தனர்.

அது மாத்திரமல்ல, அதற்குப் பிறகு இன்று வரையில் நடந்த முப்பத்து மூன்று உபதேர்தல்களில் ஒன்றில்கூட தொழிற் கட்சியின் அபேட்சகர்கள் தோல்வி அடையவில்லை.

பிரிட்டனையும், பிரிட்டிஷ் சரித்திரத்தையும், பல நாடுகளையும் ஆட்டி வைத்த கன்சர்வேடிவ் கட்சியினர் கூட ஒரு காலத்திலும் இத்தகைய மகத்தான வெற்றி பெற்றதில்லையாம்.

பிரிட்டனில் குறிப்பிட்ட கட்சியின் செல்வாக்கு குறைவதையோ அல்லது அதிகமாவதையோ உபதேர்தல்களின் முடிவைக் கொண்டு சொல்லிவிடலாம்.

அந்த ரீதியில் பார்க்கும் போது தொழிற்கட்சியின் செல்வாக்கு அதிகமாகி யிருக்கிறது என்றே சொல்ல வேண்டி யிருக்கிறது.

# அண்ணன் வருகிறான்! ஆண்டவன் எங்கே?

ஒருவருக் கொருவர் முற்றிலும் முரண்பாடான கருத்துக் கொண்ட மூன்று அரசியல் விரோதிகள் ஓரிடத்தில் கூடினார்கள். தோளோடு தோள் இடித்துக்கொண்டு உட்கார்ந்தார்கள்! ஒரே லட்சியத்தை நாடினார்கள்! அதை அடைவதற்காக எல்லோரும் ஏகமனதாகப் பிரார்த்தனை செய்தார்கள்!

இவ்வாறு சில தினங்களுக்கு முன் பத்திரிகைகளில் ஒரு முக்கியமான செய்தி வெளியாகியிருந்தது.

அவ்விதம் ஒரே இடத்தில் கூடி, ஒரே இலட்சியத்தை நாடிப் பிரார்த்தனை செய்வோர் ஏன் அரசியல் விரோதிகளாக இருக்க வேண்டும் என்ற சந்தேகம் ஏற்படலாம்.

இன்றைய உலகில் ஒவ்வொரு நாட்டிலும் பல் வேறு அரசியல் கட்சிகள் இருக்கின்றன. ஒவ்வொரு கட்சியைச் சேர்ந்தவர்களும் அந்தந்த நாட்டின் இறுதியான க்ஷேமத்துக்காகவே பாடுபடுவதாகக் கூறுகிறார்கள்.

ஆனால், ஒவ்வொரு கட்சியினரும் அனுஷ்டிக்கும் முறைகள் ஒவ்வொரு விதமாக இருக்கின்றன. அவையெல்லாம் நாட்டின் க்ஷேமத்துக்கு உகந்தவை என்று கூற முடியுமா?

பூவுலகத்திலே ஜெர்மனியின் சக்தியையும் எதிர்கால க்ஷேமத்தையும் இனி ஆயிரம் வருஷ காலத்துக்கு யாராலும் அசைக்க முடியாதவாறு ஸ்தாபிப்பதே தங்களுடைய இலட்சியம் என்று ஹிட்லரும் அவரது சீடர்களும் இடை விடாமல் கூறி வந்தார்கள். ஆனால் ஹிட்லர் அனுஷ்டித்த முறைகள் அதற்கு நேர் மாறான பலனையே கொடுத்தன. அவரது முறைகள் ஜெர்மனியையும் மற்றும் பல நாடுகளையும்கூட அழித்து அதோகதியாக்கும் கொடிய விஷமாகிவிட்டன.

இந்தியாவில் அமைதியைக் குலைத்து, ஒழுங்கின்மையையும் குழப்பத்தையும் சிருஷ்டித்து ஜனங்களையெல்லாம் படுகுழியில் தள்ளவே மகாத்மா காந்தி முனைந்திருக்கிறார் என்று பிரிட்டிஷ் அதிகாரிகளும் ராஜதந்திரிகளும் கொக்கரித்து வந்தார்கள்.

ஆனால் காந்தி மகான் அனுஷ்டித்த முறைகளின் பலன் என்ன?

அந்த மகா புருஷரின் புனிதமான முறைகள் பாரதத் திருநாட்டின் பல்வேறு நோய் நொடிகளையும் சிதறடித்து, பாரத நாட்டுக்குச் சுதந்திரத்தைக் கொடுத்து, உலக நாடுகளிடையே அதை மகோன்னதமான நிலைக்குக் கொண்டு வரும் அமிருதமாயின.

இழிவான அல்லது கொடுமையான முறைகளால் உயர்ந்த இலட்சியத்தை அடைவது முடியாத காரியம் என்பதையும், இலட்சியம் உயர்ந்ததாயின் அதை அடைவதற்கான முறைகளும் பரிசுத்தமானவையாக இருந்துதான் தீர வேண்டும் என்பதையும் காந்தி மகான் உலகத்திலுள்ளோர் அனைவரும் ஆட்சேபணையின்றி ஒப்புக் கொள்ளும்படியாக ஸ்தாபித்துள்ளார்.

"உன்னைப் பற்றி ஒன்றும் சொல்ல வேண்டாம்; உன்னுடைய நண்பன் யார் என்பதை மாத்திரம் சொல்லு" என்றானாம் ஒருவன்!

அது போலவே ஒரு கட்சியைச் சேர்ந்தவர்களின் உண்மையான இலட்சியம் என்ன என்பதை அவர்கள் கையாளும் முறைகளைக் கொண்டு நிர்ணயப்படுத்திவிடலாம் அல்லவா?

* * *

லண்டனிலுள்ள செயின்ட் பால் கதீட்ரல் என்ற கிறிஸ்துவாலயத்தில் சென்ற வாரம் ஒரு விசேஷப் பிரார்த்தனை நடைபெற்றது.

இன்னும் பத்து நாளில் பிரிட்டனில் நடக்கப்போகும் பார்லிமெண்டு பொதுத் தேர்தல்களை முன்னிட்டே அந்தப் பிரார்த்தனை நடந்தது.

பிரிட்டிஷ் பிரதம மந்திரியும் தொழிற் கட்சித் தலைவருமான கிளெமெண்ட் ஆட்லி, கன்சர்வேடிவ் கட்சித் தலைவர் வின்ஸ்டன் சர்ச்சில், லிபரல் கட்சித் தலைவர் கிளெமெண்ட் டேவிஸ் முதலியோர் தோளோடு தோள் இடித்து மண்டியிட்டுக் கொண்டு பிரார்த்தனை செய்தார்கள். மற்றும் பல பிரபல அரசியல் தலைவர்களும் பிரார்த்தனையில் கலந்து கொண்டார்கள்.

பிரிட்டனில் தகுதியான அரசாங்கத்தைத் தேர்ந்தெடுக்க பிரிட்டிஷ் மக்களுக்கு ஆண்டவன் துணை புரிய வேண்டும் என்று அப்போது பாதிரியார் வேண்டிக் கொண்டார்.

# பூதம் புறப்படும்!




ஹைட்ரஜன் குண்டைச் சிருஷ்டி செய்ய ட்ரூமன் உத்தரவு கொடுத்து விட்டார். ஆனால் ட்ரூமனின் இந்தத் தீர்மானம் ஒரு காலத்தில் அமெரிக்காவுக்கே ஆபத்தாக முடியலாம் என்று அரசியல் நிபுணர்கள் கருதுகின்றனர்.

டரைக்கோடிக்குமேலாகும் என்பதைக் கவனிப்போர், நானூறு கல்வி சாலைகளையும் ஐந்நூறு கல்வி சாலைகளையும் ஆரம்பிப்பது சமுத்திரத்தில் பெருங்காயம்கரைப்பதற்கு ஒப்பாக முடியும் என்றே கருதுவார்கள். அவ் விஷயமாக சர்க்கார் கைக் கொள்ளும் முறைகள் ஒரு புற மிருக்க, பொது ஜனங்களும் அதில் சிரத்தை கொள்ளவேண்டும். இல்லாவிடில் அந்தப் பிரச்னையைத் திருப்திகரமாகத் தீர்த்து வாக்காளர்களையாவது எழுதப் படிக்கத் தெரிந்தவர்களாகச் செய்ய இன்னும் எத்தனை வருஷங்கள் செல்லுமோ! எனவே கற்றறிவுள்ள ஒவ்வொருவரும் கற்றறிவு இல்லாத துர்ப்பாக்கியசாலிகளான ஒவ்வொருவருக்குக் கற்பிப்பதன் மூலம் திருப்திகரமான பலன் ஏற்படலாம் என்று கூறப்படுகிறது. ஒவ்வொருவரும் ஒருவருக்கு மாத்திரம் கற்பிப்பதைக் காட்டிலும் ஒரு சிலருக்காவது கற்பிப்பதைத் தமது முழுமுதற் கடமையாகக் கொண்டால்தான் அந்தக் கஷ்டமான பிரச்னையை ஒரு சில வருஷங்களிலாவது தீர்ப்பது சாத்தியமாகும். இந்த முறை இன்றோ நேற்றோ யாராலும் புதிதாகக் கண்டு பிடிக்கப்பட்டதல்ல.

நாமின் புறவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந்தார்

என்று இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் வள்ளுவ மாமுனிவர் உபதேசித்த பொன் மொழியை இந்தியா பின்பற்றுமாயின் மலைபோன்ற அந்தப் பிரச்னையை எவ்வளவு குறுகிய காலத்தில் தீர்த்து இன்பம் அடையலாம்!

## பொருத்தமான காரியம்

நாற்பத்து நாலாவது தமிழ்நாடு அரசியல் மகாநாடு சென்னை தேனும்பேட்டை காங்கிரஸ் மைதானத்தில் மிகச் சிறப்பாக நடைபெறுகிறது. பழம்பெரும் தேசபக்தரும் சிறந்த தியாகியுமான ஸ்ரீ என். அண்ணாமலைப் பிள்ளையின் தலைமையில் கூடியுள்ள இந்த மகாநாடு, தமிழ் நாட்டில் காங்கிரஸ் பெற்றுள்ள செல்வாக்கு குன்றாமல் இருப்பதற்கான வழி வகைகளைத் தேடுவதுடன், பிரயோஜனகரமான பல தீர்மானங்களையும் நிறைவேற்றும் என்று நம்புகிறோம்.



காஷ்மீர் பிரதமர் ஷேக் அப்துல்லா

மேற்படி மகாநாட்டை ஆரம்பித்து வைப்பதற்காக, 'காஷ்மீர் சிம்மம்' என்று பிரசித்திபெற்ற தேசிய வீரரும் காஷ்மீர் பிரதம மந்திரியுமான ஷேக் அப்துல்லாவை மகாநாட்டின் நிர்வாகிகள் அழைத்தது மிகவும் பாராட்டத்தக்க, பொருத்தமான காரியமாகும். தேசிய காங்கிரஸின் கட்டளைக்கு இணங்க இந்திய சமஸ்தானங்களில் சுதந்திரப் போராட்டம் ஆரம்பமானதிலிருந்து ஷேக் அப்துல்லா அதில் ஈடுபட்டு அரிய தொண்டு புரிந்ததுடன், சிறை சென்றும் பெருமை பெற்றார். அதைக் காட்டிலும் தற்போது அவர் செய்துவரும் தொண்டை எவ்வளவு போற்றினாலும் தகும்.

## மயக்கம் தெளியலாம்!

மத வெறியும் அதன் விளைவாகக் கொள்ளையும் கொலைகளும் நடந்துகொண்டிருக்கும் பாகிஸ்தான் எல்லையை அடுத்துள்ள காஷ்மீரில் மதவெறிக்கு எள்ளளவும் இடம் கொடுக்காமல் முஸ்லிம்கள், ஹிந்துக்கள், சீக்கியர்கள் முதலிய சகல மதத்தினரும் பிரிவினரும் சகோதரர்கள் போல் வாழும்படி செய்த பெருமை ஷேக் அப்துல்லாவையே சார்ந்தது. சமீபத்தில் அவர் ஐரோப்பா, அமெரிக்கா முதலிய இடங்களுக்கும் சென்று காஷ்மீர் யுத்தத்தின் உண்மை நிலையை எடுத்துக் கூறினார்; காஷ்மீர சர்க்கார் மதத்தை அடிப்படையாகக் கொண்டதல்ல என்பதை விளக்கினார்; காஷ்மீரில் முஸ்லிம்கள் அதிகமாக இருந்தாலும் அவர்கள் மதவெறி பிடித்தவர்கள் அல்ல என்று கூறி பாகிஸ்தானின் உண்மை ரூபத்தை அம்பலப்படுத்தினார்; பொய்ப் பிரசாரத்தினால் குழம்பிக் கிடக்கும் அன்னிய நாட்டினரின் சந்தேகங்களை அகற்றினார். முஸ்லிம்கள் பெரும்பாலோராக உள்ள காஷ்மீரின் பிரதம மந்திரியாக இருந்து சர்வ மத சம்மதமான கொள்கையை வெற்றிகரமாக அனுஷ்டித்து வரும் ஷேக் அப்துல்லாவின் விஜயம் காரணமாக, சென்னை மாகாணத்தில் இன்னும் இருந்துவரும் முஸ்லிம் லீக் பிரமுகர்களின் மன மயக்கம் தெளிவு அடையலாம்!



மலர் 9

# கல்கி

தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

இதழ் 28


## என்ன சேதி?

### அறிவுச் சுடர்!

பாரத நாட்டு மக்கள் அடிமை அந்தகாரம் அகன்று சுதந்திர ஒளி பெற்றுவிட்டார்கள். இனி அடுத்தபடியாகச் செய்ய வேண்டிய முதல் கடமை அறிவின்மையை அகற்றி, அஞ்ஞான இருளை ஒழித்து, அறிவுச் சுடர் பிரகாசிக்குமாறு செய்வதுதான். இல்லாவிடில் சுதந்திரம் பெற்றதன் பலனை அனுபவிக்க முடியாமற் போகும். "அறிவின்மை இன்மையுள் இன்மை" என்றவாறு வறுமையைக் காட்டிலும் மகா கொடியதான அந்த வறுமையை முற்றிலும் அகற்ற வேண்டும்.

குடியரசு இந்தியாவில் சுமார் பதினேழு கோடி பேர் வோட்டுரிமை பெறுகிறார்கள். ஆனால் அவர்களில் பெரும்பாலோர் எழுதப் படிக்கத் தெரியாதவர்கள் என்பது மிகவும் வருந்தத்தக்க விஷயம்; உலகத்திலே வேறு எந்த நாட்டிலும் இராத பரிதாபகரமான நிலைமை. எழுதப் படிக்கத் தெரிந்தவர்களின் தொகை அதிக பட்சம் நாலு கோடி இருக்கலாம். கற்றறிவு இல்லாதவர்கள் என்பதற்காக அவர்களுக்கு வோட்டுரிமையை மறுக்கச் சுதந்திர சர்க்கார் விரும்பவில்லை. அவர்கள் எல்லோருக்கும் வோட்டுரிமை அளிக்கும் பொறுப்பைக் குடியரசு சர்க்கார் மேற்கொண்டதைப் போலவே, எல்லோரையும் எழுதப் படிக்கத் தெரிந்தவர்களாகச் செய்யும் பொறுப்பையும் ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள். அதற்கு முதல் படியாக வோட்டுரிமை பெற்றுள்ள வயது வந்தவர்கள் யாவரும் எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள் ஆக வேண்டும். அந்த அவசியத்தை ஒவ்வொரு மாகாண சர்க்காரும் நன்கு உணர்ந்து அதற்கான முறைகளைத் தாமதமின்றிக் கைக்கொள்ள முற்பட்டிருக்கிறார்கள்.

### எஜமானர்களின் நிலைமை

அதற்கிணங்க, சென்னையிலும் முதியோர் கல்வி வாரம் அனுஷ்டிக்கப்பட்டது. அந்த வைபவத்தை ஆரம்பித்து வைத்த சென்னை கவர்னர் பவநகர் மகாராஜா முதியோர் கல்வி பெற வேண்டியது எவ்வளவு அத்தியாவசியம் என்பதை எடுத்துக் காட்டினார். "இனிமேல் சர்க்காரை நடத்துவோர் ஜனங்கள்தான். ஜனங்களின் வாக்குகளை அடிப்படையாகக் கொண்டே அரசாங்கம் நடைபெறும். எனவே, சர்க்காரின் எஜமானர்களான வாக்காளர்கள் கல்வி அறிவு உள்ளவர்களாக இருக்க வேண்டும். இல்லாவிடில் இங்கு ஜனநாயகம் சிதைந்து சீர்குலைந்து போகும்" என கவர்னர் எச்சரிக்கை செய்தார்.



ஸ்ரீ என். அண்ணாமலைப் பிள்ளை

கனம் கல்வி மந்திரி மாதவ மேனன் முதியோர் கல்வி அபிவிருத்திக்காகச் சென்னை சர்க்கார் செய்துள்ள காரியங்களை விவரித்தார். முதியோர் கல்விக்காக ஏற்கெனவே சர்க்கார் நானூறு கல்விசாலைகளை நடத்தி வருவதாயும், மேற்கொண்டு இந்த வருஷத்தில் ஐந்நூற்றைம்பது கல்விசாலைகளை ஆரம்பிக்க உத்தேசித்திருப்பதாயும் அவர் குறிப்பிட்டார். இந்த மாகாணத்தில் வாக்காளர்களின் தொகை இரண்

மாடர்ன் தியேட்டர்ஸ்

# பொன்முடி




















# கல்கி

## பொருளடக்கம்

மலர் 9 இதழ் 28 | பிப்ரவரி 12 | விரோதி தை 30உ


எப்பொழுதும்
யாருக்காகவாவது
அல்லது எதற்காகவாவது சேமித்து
வைக்கத்தான் வேண்டும்.
முதலீடுங்கள்
நாஷனல் ஸேவிங்ஸ் ஸெர்டிபிகேட்களில்
இவை தபாலாபீஸ்களிலும், அதிகாரம் பெற்ற ஏஜென்டுகளிடமும் (நியமிக்கப்பட்டிருக்கும் இடங்களில்), ஸேவிங்ஸ் பிரோக்களிலும் கிடைக்கும்.
புது டில்லி இந்திய சர்க்கார் நிதி மந்திரி இலாகாவால் வெளியிடப்பட்டது.
AC 74TM



# P. K. SEN'S CHAULMOOGRA

GRAM-CHAULMOOGRA
PHONE-B.B. 6408

ஏஜண்டுகள் இல்லாத
இடங்களுக்கு
ஏஜண்டுகள் தேவை

★ தைலம்
★ சோப்பு
★ ஆயிண்ட்மெண்ட்

சகலவித சரும வியாதிகளுக்கும்
இவைகள் சஞ்சீவி போன்றவை

'கேட்லாக்' வேண்டுவோருக்கு
இலவசமாக அனுப்பப்படும்.




**P. K. SEN'S - DRUGS & CHEMICAL WORKS**
**105-1 ULTADANGA MAIN ROAD CALCUTTA-4**

---

# சிறந்த சலவை...




EA2 15 T.M

தயாரிப்பவர்கள்:
தி ஈஸ்ட் ஏஷியாடிக் கம்பெனி (இந்தியா) லிமிடெட்
மதராஸ்



# நோய் பலவீனத்தை உண்டாக்கும் -



**ஆனால் ருசிமிக்க ஓவல்டின்**
**மீண்டும் ஆரோக்யம் பெற உதவும்!**

நோயும் ஜுரமும் உடம்பை பலவீனப் படுத்தும்போது, சுலபமாக ஜீரணிக்கும் அதிகமான புஷ்டி தரும் உணவு அவசியம்.

பலவீனம் நீங்கி ஆரோக்யம் பெற "ஓவல்டின்" இணையற்ற உணவு - பானம் என்று உலக முழுவதிலுமுள்ள டாக்டர்களும், நர்ஸ்களும் சிபார்சு செய்கின்றனர். அது சாப்பிட ருசியானது சுலபமாக ஜீரணமாகும். தவிர நிறைந்த புஷ்டியுள்ள உணவு ஆகையால் பலவீனமுள்ள உடலுக்கு அவசியமான போஷாக்கையளிக்கும்.

ஓவல்டினில் ஜீவசக்தியளிக்கும் குணமுள்ள பழுத்த பார்லி மால்டும், சுத்தமான ஏட்டுப்பாலும் விசேஷமாகத் தயாரித்த கோக்கோவும், இருப்பதுடன் மதிப்புவாய்ந்த இயற்கை பாஸ்பேட்களும் விட்டமின்களும் சேர்ந்துள்ளன.

ஓவல்டின் என்ற பெயருள்ளது இது ஒன்றுதான். இது இணையற்ற ஒரு தனிவகையைச் சேர்ந்தது.

# 'OVALTINE'

## ஓ வ ல் டி ன்




உலகில் மிகப் பிரசித்திபெற்ற உணவு பானம்.

*விநியோகஸ்தர்கள்:— கிரஹாம்ஸ் டிரேடிங் கம்பெனி (இந்தியா) லிட்.,*

OV. 301.




# மருதநாட்டு இளவரசி

M.G. ராமசந்தர் V.N. ஜானகி - புளிமூட்டை M.G. சக்ரபாணி
C.S.D. சிங் - P.S. வீரய்யா C.K. சரஸ்வதி C.K. நாகரதனம்
T.M. ராமசாமி பிள்ளை N.S. நாரயணபிள்ளை - K. மீனாட்சி
லலிதா பத்மினி .........டைரக்ஷன் A. காசிலிங்கம்

G. கோவிந்தன் & கம்பெனி சைதாப்பேட்டை சென்னை 15.



# புஷ்பங்களின் வாசனையுடன் எண்ணெய் ஸ்நானத்தை செய்து பாருங்கள்

உங்கள் எண்ணெய் ஸ்நானத்துக்குப் பிறகு அதிகப்பட்ட எண்ணெயைப் போக்குவதற்கு நீங்கள் பாசிப்பயறை உபயோகிக்கிறீர்களா? கேரளா டாய்லட் சோப்புகளை உபயோகித்து சாதாரண ஸ்நானம் செய்வதால் அதே சௌக்கியத்தைக் கொடுக்கும் உணர்ச்சி ஏற்படுவதோடு தொந்தரவெல்லாம் நீங்க வழி ஏற்படுகிறது. இந்த எண்ணெய் அடிப்படையான சோப்புக்களின் எடையை அதிகரிப்பதற்கு நிரப்பும் பதார்த்தங்களைச் சேர்ப்பதில்லை. அதனால்தான் கேரளா சோப்பின் நுரை நன்றாக இறங்கி சர்மத்தைச் சுத்தம் செய்து மேலுள்ள தசைகளையும் சரிப்படுத்துகிறது.




**ரோஸ்**

கேரளா ரோஸ் சோப்பின் உபயோகத்தால் ஸ்நானத்துக்குப் பிறகு மணிக்கணக்காக இந்தப் புஷ்பங்களின் ராணியின் வாசனை நிலைத்திருக்கிறது.




## கேரளா ஸோப் இன்ஸ்டிட்யூட், கள்ளிக்கோட்டை

டிபார்ட்மெண்ட் ஆப் இண்டஸ்ட்ரீஸ் அண்டு காமெர்ஸ்.

## கவர்மெண்ட் ஆப் மெட்ராஸ்

GSTA'S - KS 8 B- TAMIL

"நான் கல்யாணமாகாமலே குழந்தை பெற்றேனென்று
ஊர் சிரிக்கிறதே அதைப்பற்றி உங்களுக்குக் கவலை இல்லையா?"















# வாழ்க்கை

இது ஏவி எம் புரொடக்ஷன்ஸாரின்
புதுமுறைச் சித்திரம்

AVM
புரொடக்ஷன்ஸ்

**இப்போது 50 இடங்களில் வெற்றிமுழக்கத்தோடு**

சென்னை: பாரகன், மகாராணி, லக்ஷ்மி & திருமகள்

மதுரை: சென்ட்ரல் - கோவை: கர்னாடிக்